4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 14-6-73 வியாழன் (மலர் 138

## அமெரிக்காவின் அகம்பாவம்

வாஷ்ங்டன், ஜூன் 11—

கம்போடிய இளவரசரான சிகானுக், அமெரிக்காவோடு பேசி யுத்தம் ஏற்படாவண்ணம் ஒரு நிலைமையை மேற்கொள்ளத் தயாராக இருந்தார் என்றும், ஆனல் அமெரிக்காதான் அதைநிராகரித்து விட்டது என்றும் அமெரிக்க தரப்பில் கூறப்பட்டது.

## பிரான்சின் அணுகுண்டு சோதனைக்கு எதிர்ப்பு

ஜெனிவா, ஜூன். 11—

பிரான்சு திட்டமிட்டுள்ள அணுகுண்டு சோதனைத் திட்டத்துக்கு ஜெனிவாவில் கூடிய சர்வதேச மாநாட்டில் கடும் எதிர்ப்பும், கண்டனமும் தெரிவிக்கப்பட்டது.

பிரான்சுநாடு அது திட்டமிட்டபடி பசிபிக்மகா சமுத்திரத்தில் அணுகுண்டு சோதனை நடத்தினல் அந்நாட்டோடு கூடிய உறவை துண்டித்துக்கொள்வதென ஆஸ்திரேலியா, இந்தியா, பர்மா, ஜப்பான் போன்ற தென்கிழக்கு ஆசியநாடுகள் முடிவு செய்துள்ளன.

★ கோரிக்கைக்கு ஒப்புதல் வழங்கியதாக வெள்ளலத்தனப் பேச்சு

★ அதுவும் ஒரு சாதனை எனப் பட்டியல் போடும் ஜம்பம்

## ஆசிரியர்களைபழிவாங்கும்

# தி.மு.க.அரசின் தர்பார்!

(நமது சிறப்புச் செய்தியாளர்)

கோவை, ஜூன். 12--

**தொழிலாளர்கள் தங்களது நியாயமான உரிமைகளுக்காகப் போர்க் குரலெழுப்புவதும், அந்த உரிமைகள் கிடைத்த பின்--முதலாளிகளாலேயே மீறப்படும் போது-மீண்டும் சீறி எழுவதும் அன்றாடம் காணும் யதார்த்த நிலை.**

**'கோரிக்கைகள் தரப்பட்டுவிட்டன' என்று, வெளியில் பத்திரிகைகள் வாயிலாக தம்பட்டமடித்துக் கொண்டு-உள்ளுக்குள்ளே, வாக்குறுதிகளை மீறுவது எப்படி? என்பதற்கான சதித்திட்டங்களை தொழிலாளர் நல விரோதிகளோடு தீட்டுவதும் காணக்கிடக்கின்ற ஒன்று.**

தமிழ் நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர்கள் தங்களது 10 அம்ச கோரிக்கைகளுக்காக 1972 மே மாதத்தில் ஒரு போராட்டம் நடத்தினர்கள். தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர்களைப் பொறுத்த வரையில் இப்போராட்டம் அவர்களுக்கு முதல் படி. நூற்றுக்கணக்கில் ஆசிரியர்கள் சிறையேகினர். இறுதியில் அரசு தன் பிடிவாததைத் தளர்த்தி பேச்சு நடத்த ஒப்புக் கொண்டது.

பேச்சு வார்த்தையில் சில கோரிக்கைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டு உத்திரவுகளேயும் அரசு வழங்கியுள்ளது இது நாடறிந்த நிலை.

பத்து கோரிக்கைகளில் ஒன்ருன,

"பஞ்சாயத்து ஒன்றிய ஆசிரியர்கள் மாறுதல் குழுவிலிருந்து அதிகாரபபற்றற்றவர்களை நீக்கி—மாறுதல் சம்பந்தப்பட்ட முழு அதிகாரத்தையும் அதிகாரிகளிடமே தருவது" என்பது.

இக் கோரிக்கையை அரசு ஏற்றுக்கொண்டதோடு, அதிகாரப் பற்றற்றவர்களை நீககியும்— பஞ்சாயத்து யூனியன் கமிஷனர், மாவட்ட கல்வி அதிகாரி, ரெவினியூ டிவிஷனல் அதிகாரி— ஆகிய மூவருக்கும், மாறுதல் விஷயத்தில் முழு அதிகாரமும் தந்து உத்தர விட்டுள்ளது.

அரசு உத்திரவுப்படி இம் மூன்று அதிகாரிகளும் கலந்து ஆசிரியர்கள் மாறுதலைக் கவனிப்பதோடு— சிக்கலில்லாமல் செய்வதும் இவர்களது கடமை.

ஆனல், அரசின் உத்திரவுப்படி இயங்க முடியாமல் அதிகாரிகள் தத்தளிக்கும்

... உருவாகிவது என்பது அதன் திட்டம்.

யுள்ளது, ஆசிரியர்களுக்கு மிகுந்த கவலை அளித்துள்ளது.

அதிகாரப் பற்றற்றவர்கள் — அதாவது ஆளும் கட்சியைச் சேர்ந்த அரசியல்வாதிகள், பெருந் தலைவர்கள்- ஆசிரியர்களைப் பழிவாங்கி, மாறுதலில் தங்கள் கைவரிசையைக் காட்டுகின்றனர்.

ஒவ்வொரு பள்ளி வருட முடிவிலும் மாறுதல் என்ற பெயரால்—இவர்கள் செய்யும் அட்டூழியங்கள் கணக்கிலடங்கா. ஆசிரியர்கள் இவைகளைச் சகித்துக் கொண்டிருந்தனர். நிலைமை மீறினபின் போராட்ட நிலைக்குத் தள்ளப்பட்டனர்.

தற்போதோ நிலைமை மீண்டும் பழையகதையாகி விட்டது ஆளும் கட்சியினரின் தலையீடு அதிகமாகியுள்ளதோடு, புதிய நெருக்கடியும் உருவாகியுள்ளது.

தொழிலாளர்களது ஒற்றுமையைக் குலைத்து, அவர்தம் கோரிக்கைகளைப் புறக்கணித்து, தொழிற் சங்கங்களில தன்னை பிரதானப்படுத்திக் கொள்ளவும், தொழிலாளர்களின் தலைவனுக ஏக சக்ராதிபதியாக தன்னை ஆக்கிக் கொண்டு — அச்சக்தியை சுரண்டவும் தி. மு. க. அரசு மேற்கொண்ட நடவடிக்கைகளின் தன்மையை நாடறியும். டல இடங்களில் மூக்கறுபட்டு, முக்காடிட்டுத்திரியும் இக்கூட்டம், அரசு ஊழியர்களின் சங்கத்தில் பிளவு ஏற்படுத்தியது. தற்போது தொடக்கப்பள்ளி ஆசிரியர்களது இயக்கத்தின்பால் தன் கோரப் பற்களைப் பதித்துள்ளது.

இதன் விளைவாக 'தமிழ் நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் முன்னேற்றக் கூட்டணி' என்ற போர்வையில் ஆசிரியர்களது ஒற்றுமையை பிளவு படுத்த தீவிரமாகி வருகிறது.

இத் திமுக சங்கமானது ஆசிரியர்களை மிரட்டியும்— பணத்தைத் தந்தும்,எம் எல் ஏக்கள், பெருந்தலைவர்கள், அரசு அதிகாரிகள் ஆகியோரது துணையுடன்-பிளவு வேலைகளைச் செய்கிறது.

இக் கருங்காலிகள் கூட்டம், ஆசிரியர்களின் 'மாறுதல்' விஷயத்தில் தலையிடுவது இன்று சகஜ நிலையாகி விட்டது.

திமுக ஆசிரியர் அணியனது, அதிகாரிகள், தன் கட்சி ஆட்களோடு, ஆசிரியர்கள் மாறுதல்பட்டியலைத் தயார் செய்வது — பின் அதை அப்படியே அமுல் செய்ய, சம்பந்தப்பட்ட அதிகாரிகளை நிர்பந்தி 'பது இதனல் அதிகாரிகள் கடைநிலை ஊழியர்கள் போல் செயல்பட வேண்டிய இக்கட்டான சூழ்நிலை உருவாகிறது.

தன் சங்கத்தில் சேருகிறவர்களுக்கு தொலைவின்றி சௌகரியமான இடங்களில் மாறுதல் அளிப்பதாக வாக்குறுதி தரப்பட்டு, அந்த வாக்குறுதிகளை நிறைவேற்ற அரசியல் ரீதியில் நிர்பந்திப்பது, இதன்மூலம் ஆசிரியர்களை பிளவுபடுத்து

'அரசுக்கு விரோதமாகப் போராடினர்கள்' என்று காரணம் காட்டி— போராட்டத்தில் கலந்து கொண்டோர்மீது தாக்குதல்கள் தொடர்கிறது. இதற்காக ஆசிரியர்களைப் பிரயோகித்து நடவடிக்கை எடுக்கின்றனர்.

கோவை மாவட்டத்தில் எல்லா பஞ்சாயத்து ஒன்றியங்களிலும் இந்நிலைதான். ஆசிரியர்கள் மாவட்ட ஆட்சித் தலைவரிடம் கூறிய போது— 'அநாவசியமாக மாறுதல்கள்' இருக்காது என்று உறுதியளித்தார்— ஆனல் வாக்குறுதி மீறப்படுகிறதாம்.

மதுக்கரை, தொண்டாமுத்தூர் போன்ற வட்டாரங்களில் மாறுதல்கள் என்ற பெயரால் படுமோசமான நிலை ஏற்பட்டுள்ளது. ஆசிரியர்கள் கலக்கமடைந்துள்ளனர்.

அம்மாப்பேட்டை, ஊத்துககுளி வட்டாரங்களில் ஆசிரியர்கள் மாறுதல் அதிகமான கவலை அளித்துள்ளது. ஆசிரியர்கள் கணவனும் மனைவியும் ஒரே பள்ளியில் இருப்பது என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட நிலை. ஆனல் கணவன் பணியாற்றும் இடத்திற்கும்— மனைவி வேலை பார்க்கும் இடத்திற்கும் —ஏறத்தாழ பத்து மைல் வித்தியாசத்தில் மாறுதல் தரப்பட்டுள்ளது.

பெரியநாயக்கன்பாளையம் வட்டாரத்தில் —இன்னும் மாறுதல் உத்தரவு வரவில்லையாம்—மே 17-ம் தேதி வெளியிடும் நிலையிலிருந்த மாறுதல் உத்தரவு— பின், புறக்கணிக்கப்பட்டு, அரசியல் தலையீட்டின் காரணமாக புதுப்பிக்கும் நடவடிக்கையில் இருப்பதாக அவ்வட்டார ஆசிரியர்கள் கூறுகின்றனர். இது பற்றி சம்பந்தப்பட்ட அதிகாரிகளுடன் பேச்சும் நடத்தியுள்ளனராம்.

'மாறுதல்' விஷயமாக கோவை மாவட்ட ஆசிரியர் கூட்டணி இயக்கப் பொறுப்பாளர்கள்முன் எச்சரிக்கையான நடவடிக்கைகள் எடுக்காததால், ஆசிரியர்கள் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளதாகவும் மாவட்ட கமிட்டியைக் கூட்டி, இது சம்பந்தமாக பரிசீலித்திருந்தால், ஒட்டுமொத்த நடவடிக்கை மூலம்—ஓரளவு பிரச்சினைகளை — சரிபடுத்தி இருக்கலாம் என்றும் இயக்க ஆசிரியர்களில் ஒருவர் கூறினர்.

மேலும்;

"அரசு உத்திரவுப்படி, மாறுதல் விஷயமாக 'அப்பீல்' செய்ய முடியாது. "அப்பீல்" உரிமை இருந்தால் ஓரளவு நியாயம் கிடைக்க வழி பிறக்கும். எனவே மாறுதலால் பாதிக்கப்பட்ட ஆசிரியர்கள் — 'மாறுதல் — உத்தரவை தடை செய்யும்படி கோர்ட் நடவடிக்கைகளில் ஈடுபடுவதைத் தவிர வேறு வழியில்லை" என்று ஆசிரியர் ஒருவர் தெரிவித்தார்.

ஆசிரியர்கள் நிலைமிகவும் இக்கட்டான நிலைக்கு

## கிணறு வெட்ட பூதம் கிளம்பியது

'மேற்கு வங்கத்தில் காங்கிரசுக்கு ஏற்பட்டிருக்கும் நெருக்கடி வேறு விதமானது. அங்கு ரத்தத்தை ருசிகண்ட இளைஞர் காங்கிரஸ் தலைவர்கள் குட்டித் தலைவர்கள் போல் ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் வன்முறையில் யில் இறங்கியுள்ளனர்.

தங்களுடைய அரசியல் எதிரிகளைத் தாக்கி வருகின்றனர். தாக்குதலுக்கு ஆளானவர்களில் சிலர் முதலமைச்சர் சித்தார்த்த சங்கர் ரேயின் நெருங்கிய ஆதரவாளர்களாகவும் இருந்துள்ளனர். மார்க்சிஸ்டுகளை வரவிடாமல் தடுக்கவேண்டும் என்பதற்காக முன்பு இளைஞர் காங்கிரஸ் குண்டர்களையும் சத்ரபரிசத் குண்டர்களையும் சித்தார்த்த சங்கர்ரே சார்ந்திருந்தார். முன்பு எந்தக் குண்டர்களைக் கட்டவிழ்த்து விட்டாரோ அதே குண்டர்களுக்கு இப்போது அவரே பலியாகிக் கொண்டிருக்கும் நிலை ஏற்பட்டுள்ளது.

—இந்து (11—6—73)

உ. பி. காங்கிரஸ் அமைச்சரவை

## கவிழ்ந்தது

லட்சுமணபுரி, ஜூன். 11—

உத்திரப்பிரதேச சட்ட சபையில் காங்கிரஸ் கட்சிக்கு பெரும் மெஜாரிட்டி இருந்தும் அக்கட்சியின் அமைச்சரவை கவிழ்ந்துவிட்டது. இது, அககட்சி சட்டசபை உறுப்பினர்களில் பெருவாரியானவர்கள் அமைச்சரவைக்கு எதிராக கலகக் கொடி உயர்த்தியதே காரணம். இததுடன், போலீசார் தங்களுடைய கோரிக்கைகளைப் பெறப் போராட்டம் நடத்தியதும், அது ஒரு கலகமாகவே வளர்ந்ததும், இதைஅடக்க ராணுவம் வந்ததும் அனைவரும் அறிந்ததே. இந்த நிலைமையை உ. பி. அரசு சமாளிக்க முடியாமல் போனதும் ஒரு காரணம் என்று கூறப்படுகிறது.

### கவர்னரின் மழுப்பல்

நான்கு மணி நேரம், அமைச்சரவை ஆலோசனை நடத்தியபிறகு ராஜிநாமாச் செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்ற முடிவுக்கு வந்தனர். அதன் படியே, ராஜிநாமா செய்வதாக கவர்னரிடம் கடிதம் கொடுககப்பட்டது.

இது சம்பந்தமாக கவர்னரிடம், பெரும் மெஜாரிட்டி இருந்தும் காங்கிரஸ் அமைச்சரவை கவிழ்ந்து போனது ஏன் என நிருபர்கள் கேட்டனர்.

இது மாதிரியான நிகழ்ச்சி சட்ட சபை வரலாற்றில் இதற்கு முன் நிகழ்ந்துள்ளது என்றும், உ. பி. அமைச்சரவை கவிழந்ததில் பல்வேறு காரணங்கள் உள்ளன என்றும் அவைகளை வெளிப்படுதத முடியாது என்றும் கவர்னர் மழுப்பிவிட்டார்.

மந்திரி சபை ராஜிநாமா செய்வதன் மூலம் உத்திர பிரதேசத்தில் ஜனதிபதி ஆட்சி அமுலாகியது.

வியட்நாம் யுத்த நிறுத்த மீறல்கள்

## சமாதான பேச்சுக்கு கிசிங்கர் மீண்டும் வருகை

வாஷிங்டன், ஜூன் 11,—

வியட்நாம் ஜனநாயகக் குடியரசு பிரதிநிதி லேடக் தோவுடன், மீண்டும் பேச்சு நடத்த நிக்சனின் ஆலோசகர் கிசிங்கர் பாரிசுக்கு பறந்து சென்றுள்ளார்.

### அமெரிக்காவின் போர் ஓய்வு மீறல்

கடந்த ஆண்டு அக்டோபரில். ஏற்பட்ட வியட்நாம் போர் ஓயவு ஒப்பந்தத்தை அமெரிக்கா அரசாங்கமும் தென் வியட்நாமின் பொம்மை சர்க்காரும் மீறின. அதன் காரணமாக யுத்த மேகங்கள் வியட்நாமில் எழுந்தன

### அமெரிக்கா திணறல்

யுத்த நிறுத்த மீறல்களில் அமெரிக்காவுககும பொம்மை சர்க்காரின் கூலிப் பட்டாளங்களுக்கும் வீர வியட்நாம் மக்கள் பலத்த அடி கொடுத்தனர்.

சமாதானம் பேசிக் கொண்டே போர் ஓய்வுக் கொள்கைக்குமாருககடந்து வஞ்சகச் செயல புரிந்த அமெரிக்கா கைப்பாவை அரசின் படைகளை வியட்நாம் மக்கள் திணற அடித்தனர்.

### 14 அம்ச அறிக்கை

எனவே, மீண்டும் சமாதானப் பேச்சு வார்த்தையை வியட்நாம ஜனநாயகக் குடியரசின் பிரதிநிதி லேடக் தோவுடன், கிசிங்கர் பாரிசில் நடத்தச் சென்றுள்ளார். அப்பேச்சுவார்த்தையின்படி வியட்நாம் ஜனநாயகக்குடியரசு, தென் வியட்நாமின் புரட்சி அரசு, அமெரிக்கா,சைகோன் பொம்மை அரசாங்கம் ஆகியவற்றின் பிரதிநிதிகள் ஒப்புக்கொள்ளக் கூடிய 14 அம்ச அறிக்கை தயாராகி வருவதாக தெரிகிறது.

சென்று கொண்டிருக்கிறது அவர்கள் தங்களது சங்கத்தின் மூலம் ஒன்று கலந்து செயல்படுவதைக்கூட தமிழக அரசு வெறுப்புடன் பார்க்கிறது மாறுதல் போன்ற மிகச்சிறிய விஷயங்களில் கூட அரசியல் தலையீடு என்பது மிகவும் கொடுமையானது.உடனடியாக தமிழக அரசு இதில் தலையிட்டு ஆசிரியர்களது நெருக்கடியைத் தீர்க்க வேண்டும்.

மேலும் மாறுதல் சம்பந்தமாக 'அப்பீல்' உரிமையை அளிப்பது ஓரளவுபிரச்சினையைத் தீர்க்கும்—இவ் விஷயத்தில் ஆசிரிர்கள் உறுதியாக நின்று 'அப்பீல்' உரிமைக்காக காரியாம்ஸமானவற்றில் ஈடுபட ஆசிரியர் இயக்க பொறுப்பாளர்களுக்கு அறிவுறுத்துவது நல்லது.

முளைக்குழப்பம்

## தமிழ் நாடு தமிழ் நாடாக இல்லையாம்

"தமிழ் நாட்டிலுள்ள இரண்டு கம்யூனிஸ்ட் கட்சிகளும் தமிழ் நாட்டை கேரளமாக மேற்கு வங்காளமாக ஆக்கப்பார்க்கின்றன," தமிழ் நாடு கேரளாவாக வேண்டுமா? மேற்கு வங்காளமாக ஆக வேண்டுமா? அல்லதுதமிழ் நாடகவே இருக்க வேண்டுமா? என்ற கேள்விக்கு ஒரே பதில் தமிழ் நாடாகத்தான் இருக்க வேண்டும் என்பதுதான்"

என்றுதிருச்சியை அடுத்த திருவெறும்பூர் சேரன் கலை அரங்கில் நடைபெற்ற தி. மு. க. பொதுக்கூட்டத்தில் முதலமைச்சர் கருணாநிதி பேசியுள்ளார்.

### குறிப்பு

கருணாநிதிக்கு உலகமே தலைகீழாகத் தெரிகிறது. தமிழ்நாடு— வங்காளமாகத் தெரிகிறது. காரணம் திண்டுக்கல் அடி அவரது மூளையையே குழப்பிவிட்டது.

மார்க்சிஸ்ட் கட்சியும் கம்யூனிஸ்ட் கட்சியும் ஒரே பிரச்சினையில் ஒததுழைப்பதைக் கண்டு அஞ்சக்கூடியவர்கள் யார்? சோஷலிஸத்தின் எதிரிகள்; ஜனநாயகத்தின்எதிரிகள்; முதலாளி வர்க்கத்தின் எடுபிடிகள்.

தன் கொள்கையைச் சொல்லத் தைரியமில்லாத

## இந்திரா காங்கிரசிற்கு மக்கள் தந்த பதில்

திண்டுக்கல் தேர்தலின் போது அ. தி. மு. க. விற்கு என்ன கொள்கை இருக்கிறது என்று இந்திரா காங்கிரஸ் கட்சியினர் பிரச்சாரம் செய்தனர்.

நான் அவர்களைக் கேட்கிறேன்—மக்களிடம் உங்களது உண்மையான கொள்கைளைச் சொல்லி ஓட்டுக் கேட்க உங்களுக்குத் தெம்பு இருக்கிறதா ? திராணி இருக்கிறதா ?

எந்தக் கொள்கையைச் சொல்லி ஓட்டுக் கேட்பீர்கள் ?

நாட்டுடமையாக்கப்பட்ட பாங்குகள் சென்ற ஆண்டுவரையிலும் வர்த்தகச் சூதாடிகளுக்கு தானியங்களைச் சேமித்து வைக்க ரூ. 320 கோடி கடன் கொடுத்துள்ளார்கள்.

ஆனல் மூன்று நாட்களுக்கு முன் வெளி வந்த ரிசர்வ் பாங்க் அறிக்கையின் படி இதுவரையில் ரூ ஆயிரம் கோடி இந்த வர்த்தகச் சூதாடிகளுக்கு தானியங்களைச் சேமித்து வைக்க அளிக்கப்பட்டுள்ளது என்று கூறுகிறது.

இவ்வாறு கோடிக்கணக்கான ரூபாய்களை தானியங்களைப் பதுக்கி வைத்துக் கொள்ளையடிக்க கொழுத்த வியாபாரிகளுக்கு அளித்தால் விலைவாசிகள் உயருமா—உயராதா?உயரத்தானே செய்யும்.

வர்த்தகச் சூதாடிகளுக்கும், கள்ள மார்க்கெட் காரர்களுக்கும சுடன் கொடுக்கத்தான் நாங்கள் பாங்குகளை நாட்டுடமையாக்கினேம் என்று கூறுவார்களா ?

செலவுகளைத் திட்டமிட்டுச் செய்யாமல்— அனுவசியமாக பணத்தை விரையம செய்கிருேம், அதை ஈடுகட்ட பற்ருக் குறை பட்ஜெட் போட்டு நோட்டுகளை கோடி கோடியாக அச்சடிக்கிருேம்.

நோட்டுகளை அச்சடித்து ரூபாயின் மதிப்பைக் குறைத்து— பருப்பு எணணெய், அரிசி, துணி போன்ற எல்லாப் பொருட்களின் விலைகளையும் உயர்த்துகிருேம் என்று கூறுவார்களா ?

மக்கள் உபயோகிக்கும் அத்தியாவசிப்பண்டங்களின் மீது எக்கச்சககமான வரிகளைப் போட்டு விலையை ஏற்றி மக்களின் வாழ்க்கைத தரத்தைக குறைககிருேம் என்று தங்களின் கொள்கைகளைக் கூறுவார்களா ?

மக்களின் வாழ்க்கைத் தரத்தைக் குறைத்து அவர்களின் வாங்கும் சக்தியைப் பறிப்பதால— பொருட்களை வாங்க ஆளில்லாமல் செய்து—உற்பத்தியை முடமாக்குகிருேம், தொழில் வளர்ச்சியைத தடுத்து வேலையில்லாத இளைஞர் பட்டாளத்தைப் பெருக்குகிருேம் என்று கூறுவார்களா ?

எந்தக் கொள்கைகளைக் கூறுவார்கள்.

இந்திரா காங்கிரசின் இத்தகைய கொள்கைகளை எதிர்த்துப் போராடும் மக்களின் மண்டைகளைப் பிளக்க, போலீஸ் பட்டாளத்திற்குமுன் எப்போதும் கண்டிராத அளவுக்கு திட்டத்தில் பணம் ஒதுக்கியிருக்கிருேம் என்று கூற—

புதுப் புது கறுப்புச் சட்டங்களை (உள்துறை பாதுகாப்பு பராமரிப்புச் சட்டம்) அமுல் நடத்திக் கொண்டிருக்கிருேம் என்று கூற— அவர்களுக்கு தெம்பு இருக்கிறதா ? இத்தகைய கொள்கைகள் தாம் எம் கொள்கைகள் எனக் கூறத் தைரியமில்லாத இந்திரா காங்கிரசார்தான் மாற்றுக் கட்சியினரைப் பார்த்து உங்களுக்குக் கொள்கை உண்டா? என்று வினவினர்.

இதை நன்ருகப் புரிந்து கொண்ட திண்டுக்கல் தொகுதி மக்கள் தீர்ப்பை வழங்கினுர்கள். தமிழகத்திலேயே இந்திரா காங்கிரசுக்கு இடமில்லை என்பதை எடுத்துக் காட்டி விட்டனர்.

**--- சென்னை கடற்கரையில் ஜூன் 9-ந் தேதி நடந்த திண்டுக்கல் வெற்றிவிழாக் கூட்டத்தில் தோழர் பி. ராமமூர்த்தி பேசியது.**

## மதுரை மில்லில் 7 ஆயிரம்தொழிலாளர் ஸ்ட்ரைக்

மதுரை, ஜூன். 12—

மதுரை ஹார்வி மில்லில் 7 ஆயிரம் தொழிலாளர்கள் நேற்று உள்ளிருப்புவேலை நிறுத்தம் செய்தனர்.

இது பற்றிய விவரம் வருமாறு:—

### ஆதரவு வேலை நிறுத்தம்

மதுரை மில்லில்"காபிள்" பிரிவைச் சேர்ந்த தொழிலாளர்கள் தங்களது நியாயமான கோரிக்கைகளுக்காக வேலை நிறுத்தம் செய்தனர்.

அவர்களுக்கு ஆதரவு தெரிவிக்கும் வகையில்மற்ற தொழிலாளர்களும் கடந்த மே மாதம் 5-ந் தேதி வேலை நிறுத்தம் செய்தனர்.

இம்மாதம் (ஜூன் ) 5ந் தேதியும் வேலை நிறுத்தம் நடந்தது

### உள்ளிருப்பு வேலை நிறுத்தம்

ஆதரவுதெரிவித்து வேலை நிறுததம் செய்த நாளுக்கு "சம்பளம்" (நட்டஈடு) தரக் கோரி நேற்று தொழிலாளர்கள் உள்ளிருப்பு வேலை— நிறுத்தம் செய்தனர்.

இது பற்றி தொழிலாளர் நல அதிகாரி முன்னிலையில் சமரச பேச்சு வார்த்தை நடந்தது. பேச்சு வார்த்தையில் பலன் ஏற்படவில்லை. வேலை நிறுத்தம் நீடிக்கிறது வேலை நிறுத்தத்தில் மொத்தம் 7 ஆயிரம் தொழிலாளர்கள் ஈடுபட்டு உள்ளன

# தீக்கதிர்

## கொள்முதல் திட்டம் தோல்வி

இந்திய அரசாங்கத்தின் தானிய மொத்த வியாபாரக் கொள்கை படுதோல்வி அடைந்துள்ளது. இந்திரா அரசின் உணவுக் கொள்முதல் திட்டம் ஒரு அரசியல் ஸ்டன்ட்தான் என்று நாம் அன்று குறிப்பிட்டது இன்று உண்மையாகிறது. இதை நிதியமைச்சர் சவான் பகிரங்கமாக ஒப்புக் கொள்கிறார்.

பம்பாயில், ஐ. என். டி. யூ. சி. தொழிலாளர்களிடம் பேசும்போது 60 லட்சம் டன் உணவு தானியம் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் என்று அறிவித்துள்ளார். ஆனால் அதை தனது அரசின் தானியக் கொள்முதல் கொள்கைக்கு ஏற்பட்ட தோல்வி என்பதை ஒப்புக் கொள்ள வெட்கப்படுகிறார்.

"தற்போதைய உணவு நெருக்கடியைத் தீர்க்கவே இறக்குமதி' செய்வதாகக் கூறி தனது அரசாங்கத் தோல்வியைப் பூசி மெழுகுகிறார்.

உணவு நெருக்கடியைத் தீர்க்கவே மொத்தஉணவு தானிய வியாபாரத்தை மேற்கொண்டதாகவும், அன்னிய நாடுகளிடமிருந்து இனி தானிய இறககுமதிக்கு முற்றுப் புள்ளி வைக்கப் போவதாகவும் பேடையெங்கும் முழங்கினார்கள்.

ஆனால் இன்று நடந்ததென்ன?

உணவு நெருக்கடியைத் தீர்க்க வெளிநாடுகளில் இருந்து தானிய இறக்குமதி செய்கிறார்கள். எவ்வளவு எளிதாக வாக்குறுதி கொடுக்கிறார்கள்! அதை எவ்வளவு எளிதாக காற்றில் பறக்க விடுகிறார்கள்! இதுதான் இந்திராகாந்தி ஆட்சியின் சொல்லுக்கும், செயலுக்குமிடையே உள்ள வித்தியாசம்

உணவு தானிய மொத்த வியாபாரத்தை அரசாங்கம் எடுத்தபோது 81 லட்சம் டன் தானியம் கொள்முதல் செய்யப் போவதாக கூறினார்கள்

பின்பு 60 லட்சம் டன் தானியம்தான் கொள்முதல் செய்ய முடியும் எனவே மீதி 20 லட்சம் டன் தானியம் இறக்குமதி செய்யப் போவதாகவும் முடிவு செய்தார்கள்.

இப்பொழுது அந்த முடிவை, எழுதிய மை உலரும் முன்பு தலைகீழான முறையில் மாற்றி 60 லட்சம் டன் தானியம் இறக்குமதி செய்யாவிட்டால் நெருக்கடியைச் சமாளிக்க முடியாதென சவான் அபாயச் சங்கு ஊதியுள்ளார்.

இந்த நிலைமை ஏற்பட்டதற்கான காரணமென்ன? அரசு கொள்முதல் செய்ய மேற்கொண்ட வழிமுறை என்ன?

உபரி தானியம் வைத்திருக்கும் நிலப்பிரபுக்களையும், பணக்கார விவசாயிகளையும் கழுத்தைப் பிடித்து கொள்முதல் செய்யாமல், ஏழை, நடுத்தர விவசாயிகளை நிர்ப்பந்தித்தனர். அவர்களிடமுள்ள உபரி அற்ப சொற்பம்; நிலப்பிரபுக்கள் திட்டமிட்டு அரசாங்கத்தை ஏமாற்றினார்; அல்ல அல்ல; அவர்கள் ஏமாற்றும் வகையில் இந்திய அரசின் கொள்முதல் திட்டம் இருந்தது. அவர்களிடமிருந்து உபரி முழுவதையும் கொள்முதல் செய்யும் கொள்கை இல்லை.

இதை மாற்றாத வரையில், நிலப்பிரபுக்களிடம் கட்டாயக் கொள்முதல் செய்யும் திட்டத்தை அமுல் நடத்தாத வரையில், இன்று ஏற்பட்டுள்ளது போன்ற உணவு நெருக்கடி தவிர்க்க முடியாததாகத்தான் இருக்கும். கடுமையாகவும், கொடுமையாகவும்கூட இருக்கும். கள்ள மார்க்கெட் உணவுச் சூதாடிகளின் பகைடக்காய்களாகவே மக்கள் வதைக்கப்படுவார்கள்.

### எரிமலை வெடிக்கும்!

அண்மையில் பிரதமர் இந்திராகாந்தி அவர்கள் தமது பார்லிமெண்டரி கட்சிக் கூட்டத்தில் பேசுகையில் டில்லியில் 10 லட்சம் போலி ரேஷன் கார்டுகள் இருப்பதாகவும், நிலம் உள்ளவர்களும், வியாபாரிகளும் உணவு தானியத்தைப் பதுக்கிவைத்து சுயலாபம் தேடுவதாகவும் குற்றம் சாட்டிப் பேசியிருக்கிறார்.

ஆம்! அவர் பேசியது அனைத்தும் உண்மையே. அதாவது, அவர் நாட்டிலே காணப்படும் உண்மை நிலைமைகளைத்தான் சொன்னார்.

இப்படி உண்மைகளை அப்படியே எடுத்துச் சொல்லிவிட்டதினாலே பிரச்னைகளுக்குத் தீர்வு கண்டுவிட முடியுமா?

யார் யாரையெல்லாம் சுய லாபத்தைத் தேடக் கூடிய தீயசக்திகள் என்று அவர் குறிப்பிட்டாரோ, அவர்களையெல்லாம் எதிர்த்துப் போராட, அவர் தயாராக இருக்கிறாரா? இல்லையா? என்பதுதான் கேள்வி.

பார்லிமெண்டிலே இந்திரா காந்திக்கு மிகப் பெரிய மெஜாரிட்டி இருக்கிறது. பிரதமரிடம் அனைத்து அதிகாரங்களும் உள்ளன.

இந்த மெஜாரிட்டி பலத்தையும், அதிகார பலத்தையும் கொண்டு, மக்களுக்கு எதிரான பொருளாதாரக் குற்றங்களைப்புரியும் தீயசக்திகளை நசுக்க வேண்டும் என்று அவர் நினைத்தால், நசுக்க முடியாதா? முடியும். ஆனால் அவர் நினைக்க வேண்டுமே.

எதிர்க் கட்சிகளைச் சேர்ந்தவர்கள், எத்தனையோ' ஊர்களில்— பதுக்கல் பேர்வழிகள் யார் யார் என்றும், அவர்கள் எங்கெங்கே இருக்கிறார்கள் என்றும், அவர்கள் பதுக்கி வைத்துள்ள தானியங்கள் இருக்குமிடத்தைப்பற்றியும் அரசாங்கத்திற்கு சுட்டிக் காட்டியிருக்கிறார்கள்.

சுட்டிக் காட்டியது மாத்திரமல்ல. பதுக்கல் இடங்களை முற்றுகையிட்டிருக்கிறார்கள்.

முற்றுகையிட்டது மட்டுமல்ல. பதுக்கல் தானியங்களைக் கைப்பற்றி, மலிவான விலைக்கு ஏழை மக்களுக்கு விநியோகமும் செய்திருக்கிறார்கள்.

அதிகார பலம் இல்லாத எதிர்க் கட்சியினரால் இவ்வளவும் செய்ய முடிந்திருக்கிறது என்றால், அதற்குக் காரணம், அவர்கள், லட்சியத்தில் தூய்மை இருக்கிறது

இது போன்று அரசாங்கம் செய்யக்கூடாதா? ஏராளமான போலீஸையும், சி. ஐ. டி. களையும் வைத்துக் கொண்டிருக்கும் அரசு இதை ஏன் செய்ய முடியாது?

நாட்டிலே நிலவும் நெருக்கடியின் ஆழத்தை ஆட்சியாளர் உணரத் தவறினால், அப்புறம் நாட்டிலே என்ன நடக்கும் என்று யாரும் சொல்ல முடியாது. எரிமலை வெடிக்கும்! எல்லாம் நடக்கும்!

## இ. எஸ். ஐ. திட்டத்துக்கு தொழிலாளரிடம் பணம் பிடுங்காதே

### தினேன் பட்டாச்சார்யா உரை

புதுடெல்லி, ஜூன். 11.

இ. எஸ். ஐ. திட்டத்துக்கு தொழிலாளர்களிடமிருந்து பணம் பிடிக்கக்கூடாது என்றும் — முதலாளிகளிடம் மாத்திரமே வசூலிக்க வேண்டுமென்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எம். பி. தோழர் தினேன் பட்டாச்சார்யா அண்மையில் நாடாளுமன்றத்தில் வற்புறுத்தினார். அவர் பேச்சின் விபரமாவது:—

விலைவாசிகள் எவ்வளவு ஏறினாலும், அதை ஈடுகட்டுவதற்கு அரசாங்கம் எதுவுமே செய்யப் போவதில்லை என்பதுதான் 5-வது ஐந்தாண்டுத் திட்டத்தின் அணுகுமுறையாக உள்ளது.

வறுமை மட்டம் என்றால் என்ன என்று அரசாங்கம் காட்டி இருக்கும் கணக்கு, உண்மைக்கு மாறுபட்ட கணக்காகும். விலைவாசிகள் உயர்ந்து வாழ்க்கை செலவுகள் அதிகமாகிவிட்ட இக்காலத்தில் 40 ரூபாய்க்குள் ஒரு மனிதர் ஒரு மாத காலத்தை ஓட்டிவிட முடியுமென்று கணக்கு போட்டிருப்பது எதைக் காட்டுகிறது? ஊதிய முடக்கக் கொள்கையை அமுலாக்குவதையே இதுகாட்டுகிறது.

#### உடல் தேய்கிறது

இந்த நாட்டிலே நடந்து கொண்டிருப்பது என்ன? தொழில் அதிபர்களின் லாபம் மென்மேலும்குவிந்து கொண்டேயிருக்கிறது ஒரு புறம். தொழிலாளர்களின் உண்மைச் சம்பளம் குறைந்து கொண்டே போகிறது—மறுபுறம்.

இந்தச் சமயத்தில்தான் தனிப்பட்ட முதலாளிகளும், பொதுத் துறை நிறுவனங்களும் வேலைப் பளுவை மேற்கொண்டும் அதிகரித்து வருகிறார்கள்.

நீண்டநேரம் வேலை செய்யுமாறு தொழிலாளர்களை நிர்ப்பந்திக்கிறார்கள்.

அதன் விளைவாக, உடல் களைப்புற்று சோர்வுற்ற தொழிலாளர்கள், வேலை நேரத்தில் விபத்துகளுக்கு ஆளாகிறார்கள். விபத்துக்களின் எண்ணிக்கையும், நோய்வாய்ப்படுவோரின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டேயிருக்கிறது.

#### இ. எஸ். ஐ. கேலிக்கூத்து

இ. எஸ். ஐ. திட்டத்தின்படி உரிமையோடு தொழிலாளர்களுக்குக் கிடைக்க வேண்டிய வசதிகளோ, ஒழுங்காகக் கிடைக்காமல் கேலிக்கூத்தாகவும் மோசடியாகவும் ஆக்கப்பட்டுவிட்டன.

இ. எஸ். ஐ. திட்டத்தை ஒரு சமூகப் பாதுகாப்பு நடவடிக்கை போல அரசாங்கம் சித்தரித்துக் காட்டுகிறது. இதுவும் ஒரு மோசடிதான்.

இ. எஸ். ஐ திட்டம் என்பது தொழிலாளர்களது பணத்தைப் போட்டுநடத்தக்கூடிய ஒரு திட்டமேயாகும்.

என்றாலும்கூட, இத்திட்டத்தினால் கிடைக்க வேண்டியநன்மைகள் பெருமளவு கிடைக்காதபடி அரசாங்க அதிகார வர்க்கம் செய்துவிடுகின்றது. அதனால் இந்தத்திட்டத்தின் பேரிலேயே வெறுப்பு ஏற்பட்டு, பல ஊர்களிலும் இதற்கு எதிராக ஆர்ப்பாட்டங்களே நடக்கலாயின.

#### செலவு கூடாதாம்

இந்தத் திட்டம் எப்படி நடக்கிறது என்பதற்கு ஒரு உதாரணம் கூறுகிறேன். டில்லியிலிருந்து டாக்டர்களுக்கு ஒரு சுற்றறிக்கை போயிற்று. அதில், ஒரு நோயாளி 'குவருஷத்துக்கு ஆகும் மருந்து செலவு ரூ 50க்குள் இருக்க வேண்டும் அதற்குமேல் போகக் கூடாது" என்று கண்டிருக்கிறது.

நான் கேட்கிறேன். 50 ரூபாய்க்கு மேலும் மருந்துச் செலவு ஆகக்கூடிய நோயாக இருந்தால், அந்த நோயாளிகளின் கதி என்ன ஆவது?

#### லீவு லட்சணம்

லீவு விஷயம் எப்படி இருக்கிறது? முன்பெல்லாம் ஒரே சமயத்தில 7 நாள் லீவு கொடுத்து வந்தார்கள். இப்பொழுதோ 3 நாட்களுக்கு மேல் டாக்டர்கள் லீவு அனுமதிப்பது இல்லை.

3 நாட்களுக்கு மேல் லீவு தேவைப்பட்டால், மருத்துவ நிபுணரான ஸ்பெஷலிஸ்டைப் போய்ப் பார்க்கும்படி கூறுகிறார் டாக்டர்.

அந்த ஸ்பெஷலிஸ்டோ சுலபத்தில் அகப்படுவதே இல்லை.

இதன்மூலம் இதுவரை இ. எஸ். ஐ. திட்டத்தின் மூலம் கிடைத்துவந்த சிறிதளவு நன்மையைக்கூட, ஒரே உத்தரவு போட்டுப் பறித்துவிட்டனர்கள். இதனால் சமூகப் பாதுகாப்பு நடவடிக்கை என்று கூறப்பட்ட இந்தத் திட்டத்தையே கேலிச் சித்திரமாக்கிவிட்டனர்கள்.

#### காச நோய் மருத்துவமனைகள்

உதாரணத்துக்கு ஒன்று சொல்லுவேன். கான்பூர் பெரிய ஆஸ்பத்திரியை எடுத்துக்கொள்ளுங்கள். காசநோய் ஆஸ்பத்திரிகளிலுள்ளநோயாளிகள் மருந்து வேண்டும், மருந்து வேண்டுமென்று பெட்டிஷனுக்கு மேல் பெட்டிஷன் எழுதினாலும் கூட தக்க மருந்துகளை அவர்களுக்கு அனுப்புவது இல்லை. கான்பூரிலுள்ள நெஞ்சுவலி ஆஸ்பத்திரியில் நோயாளிகளுக்கு கொடுக்கப்பட வேண்டும் என்று அட்டையில் குறிப்பிடப்பட்ட ஆகாரங்களைக்கூட அவர்களுக்கு சப்ளை செய்வது இல்லை.

கான்பூரில் மட்டுமென்ன? இந்தியா எங்குமே இதே நிலைமைதான். மருந்துகள் ஆஸ்பத்திரிகளில் கிடைக்கவில்லையானாலும் வெளியிலுள்ள மருந்து கடைகளிலாவது வாங்கலாமென்றால், குறிப்பிடப்பட்ட அந்த மருந்துகள் பம்பாய், கல்கத்தா, சென்னைபோன்ற நகர்களிலுள்ள மருந்து கடைகளிலும் அகப்படுவது இல்லை.

#### தொழிலாளர்களிடம் பணம் வாங்காதே

இ. எஸ். ஐ. திட்டம் பற்றி ஒரு அறிக்கை சமர்ப்பிக்கப் பட்டிருப்பதாக அறிய வருகிறேன். அதன்படி ரூ 3 வரை வருமானம் உள்ளவர்களிடம் நன்கொடை வசூலிக்கக்கூடாது என்று இருக்கிறது. இதன் அர்த்தம் என்ன? மூன்று ரூபாய்க்குமேல் வருமானம் உள்ள தொழிலாளிகளிடம் நன்கொடை வசூல் செய் என்றுதானே அர்த்தம்! இது ஒரு கேலிக்கூத்து அல்லவா! எந்தவொரு தொழிலாளியிடம் நன்கொடை வசூலிக்ககூடாது.

இத்திட்டத்துக்கு வேண்டிய நிதியை முதலாளிகளிடம் மாத்திரமிருந்தே வசூலிக்கவேண்டும். தேவைபட்டால் மத்திய அரசும், மாநில அரசுகளும் மானியம், கொடுத்தும் உதவலாம்.

மருத்துவ மனைகளையும், பெரும கட்டிடங்களையும் கட்டுவதற்கான செலவையும், நிருவாகச் செலவையும், தொழிலாளர்கள் தலையில் கட்டுவது நியாயமா? இதற்கெல்லாம் தொழிலாளர்கள் ஏன் பணம் கொடுக்க வேண்டும்?"— என்று கேட்டார்.

---

## தாராபுரம் வட்டத்தின் நெசவாளர் சங்கம் நிர்வாகிகள் தேர்வு

தாராபுரம் ஜூன், 10—

கோவை மாவட்ட கைத்தறி நெசவாளர் சங்க கூட்டுச் செயலாளர் அ. நடராசு அவர்கள் தலைமையில் 7—6—73-ம் தேதி இரவு 11 மணியளவில் தாராபுரம வட்டக்கிளைச் சங்கங்களில் இணைப்புக் கூட்டம் இங்கு நடைபெற்றது. அது சமயம் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1. தமிழக முதலமைச்சர் 7-5-73-ம் தேதி கோவையில் அறிவித்த ரூ. 1 கோடி கடன் 100, 80, 60 உயாரகம் நெய்யும் நெசவாளர்களுக்கு தறி ஒன்றுக்கு ரூ. 100 வீதம் 12—6—73-ம் தேதிக்குள் பட்டுவாடா செய்யவேண்டும்.

2. நெசவாளர்களுக்கு சார்டு மூலம் 12—6—73-ம் தேதிக்குள் நூல் விநியோகிக்க வேண்டும்.

3. தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் மூலம் நூல்விநியோகம் 13 சதவீதலாபம வைப்பதை தடுத்து செலவடக்கம் 5சதவீதம் ஆணையிட வேண்டும என்றும், மூன்றுகோரிக்கைகளை முன் வைத்து தலைமைச் சங்கம் மேற்கொள்ளவிருக்கும உண்ணாவிரத போராட்டத்தை தாராபுரம் தாலூக்கா அலுவலகம் முன்பாக நடத்துவதெனவும் போராட்டத்தை சிறப்புற நடத்த 8 பேர்கள் கொண்ட போராட்டக் கமிட்டி அமைக்கப்பட்டது.

டி. எஸ். சண்முகம் கமிட்டித் தலைவராகவும், என். கிருஷ்ணசாமி செயலாளராகவும், டி. சிவன்மலை செட்டியார் பொருளாளராகவும், எம். ஆர். தண்டபாணி, சி. ரத்னசாமி, வெ. கிருஷ்ணசாமி செட்டியார், கெ. வெங்கிடுசாமி, அ. கிருஷ்ணசாமி ஆகியவர்கள் கமிட்டி உறுப்பினர்களாகவும் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

---

## பேட்டவாய்த்தலையில் சி. ஐ. டி. யூ. சங்கம் உதயம்

பேட்டைவாய்த்தலை ஜூன். 10—

பேட்டவாய்த்தலை காவேரி சர்க்கரை ஆலையில் ஏ. ஐ. டி. யூ. சி யுடன் இணைக்கப்பட்ட தொழிலாளர் சங்கம் என்ற ஸ்தாபனம் தோழர் ஆர். உமாநாத் தலைமையில் இயங்கி வந்தது. அதற்கு தோழர் ஆர். கருப்பையா (வலது கம்யூனிஸ்ட்) என்பவர் காரியதரிசியாக இருந்து பணியாற்றி வந்தார். கடந்த சில வருடங்களாக வலது கம்யூனிஸ்ட் கட்சியை சார்ந்தவர்கள் தங்களது அரசியல் லாப வெறியை குறிக்கோளாகக் கொண்டு தொழிலாளர்களின் பிரச்சனைகளை தீர்க்காமல், அவர்களின் போராட்ட உணர்ச்சிகளை மழுங்கச்செய்து, அவர்களின் ஒற்றுமையை சீர்குலைக்கவும் பல கோணங்களில் முயற்சி செய்தனர். தோழர் ஆர். உமாநாத்தின் ஆலோசனைகளையும் புறக்கணித்தனர்.

இதை அறிந்த தொழிலாளத் தோழர்கள் ஸ்தலத்தில் நடக்கும் துரோகச் செயல்களைப் பற்றி ஒரு மகஜர் தயார் செய்து அதை தலைவர் தோழர் ஆர். உமாநாத்திடம் கொடுத்தனர். பின் தொழிலாளர்களின் நிர்பந்தத்தின் காரணமாகவும், ஏ ஐ. டி. யூ. சியின் தொழிலாளர் துரோகச் செயல்களை முறியடிப்பதற்காகவும் மே 10ம் தேதி தோழர் ஆர். உமாநாத் தலைமையில் சி. ஐ. டி. யூவுடன் இணைக்கப்பட்ட புதிய சங்கம் ஆரம்பிக்கப்பட்டது.

அதற்கு செயலாளராக தோழர் டி கே ரெங்கராஜன் மற்றும் உதவி தலைவர்கள் ஏ முத்து, மருதமுத்துவும் உதவி செயலாளர்களாக கலியபெருமாள், எம். அண்ணாவி பொருளாளராகவும் ஏ. தானுப்பிள்ளை ஆகியவர்கள் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

---

ரூ. 38 லட்சத்தோடு

## நேபாள விமானம் கடத்தப்பட்டது

காட்மாண்டு, ஜூன் 10—

இன்று காலையில் வழக்கமாக தொழில் முக்கியத்துவம் வாய்ந்த பிரத நகரிலிருந்து காட்மாண்டுக்கு வழக்கமாக சென்றுகொண்டிருந்த விமானம் ஆயுதம் தாங்கிய மூவரால் கடத்தப்பட்டுள்ளது.

கடத்தப்பட்ட விமானத்திலிருந்து ரூ 38 லட்சம் பெறுமான நேபாள கரன்சி நோட்டுகளை ஆயுதம் ஏந்தியவர்கள் எடுத்துச் சென்றுவிட்டனர். துப்பாக்கி முனையில் விமானியை மிரட்டி விமானத்தை வேறு திசையில் ஓட்டச் செய்து, போர்பிஸ் கஞ்ச் விமான நிலையத்தில் இறங்கினர். அங்கு தயாராக நின்று கொண்டிருந்த காரில் ஏறி தப்பி சென்றுவிட்டனர். கடத்தப்பட்ட பணம் நேபாள ராஷ்டிர பாங்கு (மத்திய வங்கி) பணம் எனக் கூறப்படுகிறது. கடத்தல்காரர்களை பிடிப்பதற்கு உதவுமாறு இந்திய அரசை, நேபாள அரசு கேட்டுள்ளது.

---

## வியட்னாமுக்கு சீன உதவி மேலும் அதிகரிக்கிறது

ஹாங்காங், ஜூன் 11—

வட வியட்னாம் ஜனநாயக மக்கள் குடியரசுப் பிரதமர் பாம் வான் டாங் அவர்களும் வட வியட்னாம் தொழிலாளர் கட்சித் தலைவர் லீ டுவான் அவர்களும் பீகிங் மாநகர் சென்று, இன்றைய இந்தோசீனா நிலவரம் குறித்து சீனப் பிரதமர் சூ யென் லாயுடனும், மற்றுமுள்ள சீனத் தலைவர்களுடனும் விபரமாக விவாதித்தார்கள்.

### உதவி உடன்பாடு

பலநாள் பேச்சு வார்த்தைக்குப் பிறகு - வியட்னாம் தேசீயப் பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்வதற்கும், யுத்தத்தால் ஏற்பட்டுள்ள சேதங்களினின்றுமீள்வதற்கும், தேசப் பாதுகாப்பை பலப்படுத்தவும் ஓர் உதவி உடன்படிக்கையை சீன அரசாங்கத்துடன் வியட்னாம் தலைவர்கள் செய்து கொண்டார்கள்.

சீனாவின் இந்த மகத்தான உதவியையும் அதன் முக்கியத்வத்தையும் பற்றி லீ டுவான் அவர்கள் பெரிதும் பாராட்டிப் பேசினார்.

வியட்னாம் மக்களுக்கும் சீன மக்களுக்கும் இடையே நிலவும் மகத்தான நட்புறவிலும், தீவிர ஒருமைப்பாட்டிலும், இந்த உடன்படிக்கையானது ஓர் புதிய அபிவிருத்தியாக விளங்குகிறது"— என்று குறிப்பிட்டார்.

---

## பீகார் மின் தொழிலாளர் வேலை நிறுத்தத்துக்கு தடை

### பாதுகாப்பு விதிகள் துஷ்பிரயோகம்

பாட்னா, ஜூன். 10—

மின்சார வாரியத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதற்கு 6 மாதத்துக்கு பீகார் மாநில அரசு தடை விதித்துள்ளது.

பாதுகாப்பு விதிகளின் 118-வது பிரிவின்கீழ் இந்த உத்திரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது.

அவசர கால நிலைமையை நீடிப்பதற்கு நாடாளுமன்றத்தில் விளக்கம் கூறப்பட்ட சமயத்தில், உள்நாட்டில் மக்களுடைய போராட்டங்களை நசுக்குவதற்கு பாதுகாப்பு விதிகளின் கீழ் அதிகாரம் பயன்படுத்தப்பட மாட்டாது என்று இந்திய அரசாங்கம் வாக்குறுதி கொடுத்தது.

அந்த வாக்குறுதிக்கு மாறாக அண்மையில், ரயில்வே தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தைத் தடைசெய்ய இந்திய அரசு, பாதுகாப்பு விதிகளைப் பயன்படுத்தியது.

உ. பி. அரசும் 6 மாதங்களுக்கு வேலை நிறுத்தம் செய்யத் தடை பிறப்பித்துள்ளது.

இப்போது பீகார் மாநில அரசும் இந்தத் தடையை விதித்துள்ளது.

---

ஹேமந்த குமார் கொலை வழக்கு

## கொலைகாரனுக்கு காங்கிரஸ் கட்சி பாதுகாப்பு

### வழக்கை வாபஸ் பெற திட்டம்

கல்கத்தா, ஜூன். 11—

இரண்டு ஆண்டுகளுக்கு முன் பார்வர்டு பிளாக் கட்சியின் தலைவர் ஹேமந்த குமார் பாசுவைக் கொலை செய்த, செய்தி கேட்டு நாடே திடுக்கிட்டது. இந்தப் படுகொலை 1971-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 20-ந் தேதி நடந்தது. ஆனால் கொலைகாரர்களைக் கண்டுபிடிக்க மேற்கு வங்க அரசுக்கு இத்தனை காலம் ஆகிவிட்டது. இப்போது அந்தக் கொலைகாரர்களைத் தண்டிக்க போடப்பட்ட வழக்கையும், திரும்ப பெற மேற்கு வங்க அரசு முடிவு செய்யவிருப்பதாகத் தெரிகிறது. இதுபற்றி மேற்கு வங்க எதிர்க்கட்சித் தலைவர்கள் ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளனர். அந்த அறிக்கையின் விபரம் வருமாறு:—

"பார்வர்டு பிளாக் கட்சியின் தனிப்பெரும் தலைவரும், சுதந்திரப் போராட்டத்தில் போராடி பெரு மதிப்புப் பெற்றவருமான ஹேமந்தகுமார்பாசு, தேர்தல் பணியில் ஈடுபட்டிருக்கும்போது, 1971-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 20-ந் தேதி கொடூரமான முறையில் படுகொலை செய்யப்பட்டார். நாடு முழுவதும் இது பெரும் கொந்தளிப்பை ஏற்படுத்தியது.

இந்தப் பயங்கர சதியை அம்பலப்படுத்தி, குற்றவாளிகளைத் தண்டிக்க வேண்டும் என்று சகல இடதுசாரிக் கட்சிகளும், மற்ற நல்லெண்ணம் கொண்ட மக்களும் கோரினர்.

#### ரேயின் கைவிரிப்பு

சித்தார்த்த சங்கர் ரே இந்த நிகழ்ச்சி நடந்த உடனேயே இந்தக் கொடூரமான குற்றத்திற்கு இந்திய கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சியே காரணம் என்று அறிக்கைவிட்டார். பின்னால் 1972-ம் ஆண்டு மார்ச் 28-ம் தேதி தேர்தல் முடிந்த பிறகு புது டில்லியில் நிருபர்கள், "மற்றவைகளோடு பெரும் அரசியல் தலைவர்கள் கொலைபற்றிய விசாரணையும் ஏற்படுமா?" என்று கேட்டார்கள். அதற்கு ரே, "மேற்கு வங்க மக்கள் அத்தகைய விசாரணை எதவும் வேண்டும் என்று கோரவில்லை என்றும், மார்க்சிஸ்ட் கட்சி ஒன்றுதான் கேட்கிறது என்றும் கூறி, அத்தகைய விசாரணை இல்லை" என்று கூறிவிட்டார்.

இப்போது அரசாங்கத்தின் உத்திரவின் பேரில் "நிகழ்ச்சியை நேரடியாகப் பார்த்த சாட்சிகள் யாரும் இல்லை" என்ற காரணம் காட்டி, போலீஸ் அந்த வழக்கை திரும்பப் பெற இருக்கிறது. அரசாங்கம் இந்த வழக்கை முறையாக நடத்தாது என்று நாங்கள் அஞ்சுகிறோம்.

#### உண்மைகள் மறைக்கப்படுகின்றன

ஏனென்றால் வழக்கு நடந்தால் பல பயங்கரமான உண்மைகள் வெளிப்பட்டு காங்கிரஸ் கட்சிக்கும், அரசாங்கத்துக்கும் பல நெருக்கடிகள் ஏற்படும். எங்களுடைய பயம் இன்று உண்மையாகிவிட்டது. இத்தகைய நடத்தைக்காகவும் பல பயங்கரமான உண்மைகளை மறைத்து, குற்றவாளிகளைப் பாதுகாக்கும் ஏற்பாடுகளைச் செய்வதற்காகவும் நாங்கள் அரசாங்கத்தைக் கண்டிக்கிறோம்.

தீவிரமான விசாரணை நடத்தி உண்மையை அறிந்து, குற்றவாளிகளையும் அவர்களோடு சேர்ந்தவர்களையும் தண்டிக்க வேண்டும என்று நாங்கள் கோருகிறோம்.

இந்த அறிக்கையை தோழர் ஜோதிபாசு (மார்க்சிஸ்ட்), நிகார் முகர்ஜி (எஸ். யு. சி), அஷோக் கோஷ் (எப் பி), மக்கன்பால் (ஆர். எஸ். பி), ஜோதி பட்டாசார்ஜி (தொ. கட்சி), சதிஷ் குமார் (ஆர் சி.பி.ஐ), ராம் சட்டர்ஜி (மார்க்சிஸ்ட் பார்வர்டு பிளாக்), ரபி தத்தா (புரட்சி பங்களா காங்.) ஆகியோர் வெளியிட்டுள்ளனர்.

---

ராஜபாளையத்தில்

## கண்டன கூட்டம்

இராஜபாளையம், ஜூன். 10—

இங்குள்ள மதுரை ராஜா கடை தெருவில் செங்கல் ஓடு தொழிற்சாலைநிர்வாகம் (ஆர். பி. ஆதிநாராயணன் திமுக வட்ட செயலாளர்) தொழிலாளர்களைப் பழி வாங்கி வருகிறது. இதைக் கண்டித்து மார்க்சிஸ்ட் கட்சி சார்பில் முருகன் தலைமையில் கூட்டம் நடந்தது. தோழர்கள் நீராத்திலிங்கம், எம். தங்கச்சாமி சிஐடியூ செயலாளர் ச.மாதவன், பாலதண்டாயுதபாணி பிஎஸ்சி பி.எல். (மாணவர் சங்கம்) ஆகியோர் பேசினார்கள்.

# வாட்டர்கேட் ஊழலில் நிக்சனின் பங்கு என்ன?

## முக்கிய அதிகாரியின் சாட்சியம்

நியூயார்க், ஜூன். 11—

மாற்றுக்கட்சியின் தேர்தல் அலுவலகத்தில் வேவு பார்க்கும் கருவியை பொருத்தியதற்காக (வாட்டர்கேட் ஊழல்) பல அதிகாரிகள் நிக்சன் நிர்வாகத்திலிருந்து ராஜினமாச் செய்ய நிர்ப்பந்திக்கப்பட்டார்கள் அல்லவா? அவர்களில் மிக முக்கியமான அதிகாரிதான் டீன் என்பவர்.

அவர், நேற்று செனட் விசாரணைக் குழு முன்பு சாட்சியம் அளித்தார். அப்போது ஜனதிபதி நிக்சன் மீது கடுமையான குற்றம் சாட்டினார். நிக்சனுக்கும் வாட்டர்கேட் ஊழலுக்கும் சம்பந்தம் இல்லை என்று கூறுவது உண்மையல்ல என்ருர். அந்த மோசடி வேலை நடந்த போதும் அவருக்குத் தெரியும்.

அது அம்பலமான பிறகு அதை மூடிமறைக்க நடவடிக்கை எடுக்கப்பட்ட போதும் அவருக்குத் தெரியும். ஒவ்வொரு கட்டத்திலும் அவரைக் கலந்துகொண்டுதான் அதசம்பந்தமான வேலைகள் மேற்கொள்ளப்பட்டன என்ருர்.

(அமெரிக்க நாட்டை ஆட்சிபுரியும் ஒரு ஜனதிபதியின் யோக்கியதை எத்தகையது என்பதை இந்த வாட்டர்கேட் ஊழல் புரியாத உள்ளங்களுக்கெல்லாம் புரியவைக்கிறது. இத்தகைய கயவர்கள்தான் வியட்நாம்மீதும், கம்போடியா மீதும், லாவோஸ் மீதும் நடத்திய—நடத்திக்கொண்டிக்கிற யுத்தம் ஜனநாயகத்தையும், சுதந்திர உலகத்தின் நாகரிகத்தையும் பாதுகாக்கின்ற யுத்தம் என்று பசப்பினர்கள்.)

# மே. வங்க காங்கிரசில் சண்டை முற்றுகிறது

## பிரதேச காங்கிரஸ் கமிட்டி உறுப்பினருக்குக் கல்தா

கல்கத்தா, ஜூன். 1[illegible]—

மேற்கு வங்கத்தில் காங்கிரஸ் கட்சிககுள், கோஷ்டிச் சண்டையின் உச்சகட்டத்தில், மாநிலக் காங்கிரஸ் கமிட்டியில் அங்கம் வகிக்கும் உறுப்பினர்களையே வெளியேற்றம் படலம் தொடங்கியுள்ளது.

இந்த வரிசையில் முதல் ஆளாக ரகுபதிசகா என்பவர் வெளியேற்றப்பட்டுள்ளார். அவருடன் சாதாரண உறுப்பினர்களான வேறு மூவரும் காங்கிரஸ் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டுள்ளனர்.

சண்டிபாத மித்ரா எம். எல். ஏ. மிருகத்தனமாக அடித்துக் கொல்லப்பட்டதைத தொடர்ந்து மே 25ம் தேதி ரகுபதி சகாவும் வேறு நால்வரும் மேற்கு வங்கக் காங்கிரஸ் கமிட்டி தலைவர் அருண்மொய்த்ராவால் சஸ்பெண்ட் செய்யப்பட்டனர்.

இதைத் தொடர்ந்து கட்சிக்குள் பூசல்வலுத்தது. காங்கிரஸ் கட்சிக்குள் மேலும் மோதல் வளருவதைத தடுக்கும் நோக்கத்தில் ரகுபதி சகாவும், வேறு மூவரும் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டுள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

## “கருணஇஸம்”

“இந்த மண்ணுக்கு ஏற்ப சமதாமத் தரு வளர்ப்போம். சமதர்மம சோஷலிஸம் என்ருல், எல்லாத் தொழில்களையும் எல்லாப் பேருந்துகளையும் தேசியமயமாக்குவதல்ல.”

— முதலமைச்சர் கருணநிதி மதுரையில் பேசியது

இது சோஷலிஸமல்ல' முதலாளி வர்க்கத்துக்கு துணை நிற்கும் கருணஇஸம

# மொத்த விலை குறியீட் டெண்

## அரசு அறிவிப்பு

புதுடில்லி, ஜூன். 11—

அதிகாரப் பூர்வமான மொத்த விலைக் குறியீட்டெண் மேலும் மேலும் உயர்ந்து கொணடே செல்கிறது. 1973 மே 19ஆம் தேதியுடன் முடிவடைந்த வாரத்தில் 0.3 சதவிகிதம் அதிகரித்து 232.2 ஆக ஆயிற்று. இந்த நிலையில் மொத்த விலைக் குறியீட்டெண், சென்ற மாதத்தில் இதற்கு நிகரான வாரத்தோடு ஒப்பிடுகையில் 3.8 சதவிகிதமும், சென்ற ஆண்டில் இதற்கு நிகரான வாரத்தோடு ஒப்பிடுகையில் 20.0 சதவிகிதம் அதிகமாக இருந்தது.

குறிப்பிட்ட வாரத்தில் ‘உணவுப் பொருள்’ பிரிவின் விலைக் குறியீட்டெண் 1 1 சதவிகிதம அதிகரித்து 274.0 ஆக ஆயிற்று. ‘மதுபானம், புகையிலை’ பிரிவின் விலைக் குறியீட்டெண் 0·9 சதவிகிதம் குறைந்து ;46·3 ஆக ஆயிற்று. ‘எரிபொருள், மின்சக்தி, மசகெண்ணெய்’ பிரிவின் விலைக் குறியீட்டெண் சென்ற வாரத்தைப் போலவே 187.5 ஆக இருந்தது.

‘தொழில் துறை கச்சாப் பொருள்’ பிரிவின் விலைக் குறியீட்டெண் 1.1 சதவிகிதம் குறைந்து 263.2 ஆக ஆயிற்று ‘ரசாயனப் பொருள்’ ‘இயந்திரங்கள், போக்குவரத்து சாதானங்கள்’ ஆகிய பிரிவுகளின் விலைக் குறியீட்டெண்களில் மாறுதல இல்லை. குறிப்பிட்ட வார இறுதியில் அவை முறையே 200 2, 172.4 ஆக இருந்தன.

குறிப்பிட்ட வார இறுதியில் செய்பொருள் பிரிவின் விலைக் குறியீட்டெண் 185.5 ஆக இருந்தது.

# சர்க்கரை உற்பத்தி அதிகரிப்பு விலை ஏன் குறையவில்லை?

புதுடில்லி, ஜூன், 11-

நடப்பு சர்சகரைப் பருவத்தில் 1973 மே இறுதி வரையில் 37 லட்சத்து 62 ஆயிரமடன் சர்க்கரை உற்பத்தி செய்யப்பட்டிருக்கிறது. சென்ற வருடத்தில் இதற்கு நிகரான காலத்தைக் காட்டிலும் இந்த உற்பத்தி 7 லசத்து 29 ஆயிரமடன் அதிகமாகும் என்று அரசு அறிவிப்பு கூறுகிறது.

இந்த ஆண்டில் மே மாத இறுதி வரையில் 23 லட்சத்து 63 ஆயிரம் டன் சர்க்கரை, சர்ககரை ஆலைசளிலிருந்து வெளியே அனுப்பப்பட்டிருக்கிறது.

சென்ற சர்க்கரைப் பருவத்தில் இதே காலத்தில் 27 லட்சத்து 7 ஆயிரம் டன் சர்க்கரை அனுப்பப்பட்டது.

1973 மே மாத இறுதி வரையில் சர்க்கரை ஆலைகளிடம் 19 லட்சத்து 91 ஆயிரம் டன் சர்ககரை கையிருப்பில இருந்தது. சென்ற ஆண்டில் இதே காலத்தில் சர்க்கரை ஆலைகளிடம் 17 லட்சத்து 33 ஆயிரம டன் சர்க்கரை கையிருப்பில் இருந்தது. இந்த ஆண்டு ஜூன் 3-ஆம தேதி நிலவரப்படி 13 சர்க்கரை ஆலைகள், சர்க்கரை உற்பத்தி செய்து கொண்டிருந்தன. சென்ற ஆண்டு இதே நாளன்று 8 ஆலைகள் மட்டுமே சர்க்கரை உற்பத்தி செய்துகொண்டிருந்தன.

இவ்வாறு சர்க்கரை உற்பத்தி அதிகரித்த போதிலும் சர்க்கரை விலை குறையாமலிருப்பதேன்?

இங்குதானுள்ளது சர்க்கரை முதலாளிகளுக்கும், இந்திரா அரசாங்கத்திற்கும் இடையே உறவு-மறைமுக உடன்பாடு.

எவ்வளவு உற்பத்தி அதிகரித்தாலும் சர்க்கரை முதலாளிகள் விற்கும் விலையைக் குறைக்காமல் இருக்கச்செய்து கொண்டுள்ள ஏற்பாடு அது.

# ஐ. என். டி. யூ. சி. சங்கமும் முதலாளிகளும் கூட்டு

## சி. ஐ. டி. யூ கண்டனம்

பம்பாய், ஜூன். 12—

வாரத்தில் 7 நாட்களும் வேலை செய்ய வேண்டும் என்ற போக்கை பம்பாய் இஞ்சினியரிங் தொழிலாளர் சங்கம் (சி. ஐ. டி. யூ.) எதிர்த்துள்ளது.

அதன் விவரம் வருமாறு:-

### முதலாளிகளுடன் கூட்டு

ஆர் எம்.எம் எஸ். என்ற ஐ என். டி. யூ. சி. மில் தொழிலாளர் சங்கமும் ஆலை முதலாளிகள் சங்கமும், விடுமுறையன்றி வாரத்தில் 7 நாட்களும் நூற்பாலைகளில் வேலை செய்வது என்ற கொள்கையை கடைப்பிடிப்பது எனக் கூட்டாக முடிவு செய்தது.

### தொழிலாளர் விரோதக் கொள்கை

இதனை இஞ்சினியரிங் தொழிலாளர் சங்கம் (சி ஐ. டி. யூ) கடுமையாக எதிர்த்துள்ளது. அது தனது அறிக்கையில் 7 நாட்களும் வேலை செய்வது என்ற கொள்கை இந்திய தொழிலாளர் அமைப்பு விதிகளுக்கு முரணபட்டது. தொழிலாளிவர்க்க நலனுக்கு உகந்ததல்ல. இது தொழிலாளர் விரோதக்கொள்கையாகும் என்று கூறியுள்ளது.

### மோசடி வேலை

மேலும், இம் முறையானது அதிகபட்சவேலையை அதிகரித்தல் என்ற பெயரில் முதலாளிகளுடன் சேர்ந்துகொண்டு தொழிலாளி வர்க்கத்திற்கு துரோகம் புரியும் மோசடி வேலையாகும்.

ஐ. என். டி. யூ. சி. சங்கம் இத் துரோக வேலையை செய்து முடிக்க முயற்சிக்கிறது என்று கண்டனம் தெரிவித்துள்ளது.

# பள்ளி நிர்வாகியின் காட்டுராஜா தர்பார்

## ஆசிரியர்கள் வேலை நீக்கத்தை எதிர்த்து கண்டனக் கூட்டம்

சங்கரன்கோவில், ஜூன். 10—

சங்கரன்கோவில் அமராபதி நாடார் உயர்நிலைப் பள்ளியில் பல ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றிய நிரந்தர ஆசிரியர் திரு. ஆர். அய்யப்பன், ஏவலர் திரு. இ. இருளப்பன், பட்டதாரி ஆசிரியர் திரு. சி. தேவராஜ் ஆகியவர்களை நிர்வாகி வேலையைவிட்டு நீக்கியுள்ளார். நெல்லை முதன்மைக் கல்வி அதிகாரி அவர்களின் உத்தரவையும் மீறி பள்ளியை அடைத்து வைததுள்ளார். இதனல் மாணவர்களின் கல்விக்கு ஆபத்து விளைவித்துள்ளார். நிர்வாகியின் இத்தகைய பாதகச் செபலைக கண்டித்து 9—6—73ல் சங்கரன்கோவில் பயணிகள் விடுதியிலிருந்து ஆசிரியர்கள் கண்டன ஊர்வலம் நடத்தினர் நகரின் முக்கிய வீதிகளின் வழியாக கண்டன கோஷங்கள் முழங்கி வந்தனர். பின்னர் சுவாமி சன்னதி காந்தி மண்டபத்தில் பொதுக்கூட்டம் நடந்தது.

கால்நடை உதவியாளர் சங்க மாநில உப தலைவர் திரு ஏ. இராமசாமி தலைமை வகித்தார். மாவட்ட ஆசிரியர் கூட்டணி செயலர் திரு. பி. முத்தையா, பொருளாளர் திரு. திருஞானசம்பந்தம் மற்றும் திரு. கந்தசாமி எம். ஏ. பி. டி, திரு. சங்கர விஞயகம், திரு. பால்வண்ணன், திரு. ஜெயசீலன், திரு. மிளகிதாஸ், திரு. அழகர் முதலியவர்களும், சர்வ கட்சி சார்பாக திருவாளர்கள் அ. சா.குருசாமி (அ.தி.மு.க), அண்ணாமலை (இ. காங்), ஜெகந்நாதன் (ப. காங்கிரஸ்), ஆர். எஸ். முப்பிடாதி (மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்) முதலியவர்கள் நிர்வாகியின் செயலைக் கண்டித்தும், பள்ளியை திறக்கக் கோரியும், பாதிக்கப்பட்ட ஆசிரியர்களை உடனே வேலையில் அமர்த்தும்படியும் வலியுறுத்திப் பேசினர்கள்.

கீழ்க்கண்ட தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

“சங்கரன்கோவில் அமராபதி நாடார் உயர்நிலைப் பள்ளியின் நிர்வாகி, இடைநிலை ஆசிரியர் திரு. அய்யப்பன், ஏவலர் இருளப்பன், பட்டதாரி ஆசிரியர் திரு. தேவராஜ் ஆகிய மூவரையும் வெளியேற்றியதையும், அதன் தொடர்பாக பள்ளியை மூடிய செயலையும் இக்கூட்டம வன்மையாகக கண்டிப்பதோடு, யாரையும் பழிவாங்காமல் பள்ளியை உடனே திறக்க வேண்டுகிறது. நிர்வாகி பள்ளியைத் திறக்க மறுத்தால் பள்ளியை அரசே ஏற்று நடத்தி அனைவரையும் பாதிக்காமல் வேலை கிடைக்கச் செய்யும்படியும் தமிழக அரசையும், கல்வி இலாகாவையும் இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.”

# தி. மு. க.வில் சர்வாதிகாரம் பாலன் எம். பி. விலகல்

நாகர்கோவில், ஜூன். 11—

கன்னியாகுமரி மாவட்ட தி மு. க.வின் முக்கிய பிரமுகரும், தி.மு.க வின் ராஜ்யசபா உறுப்பினருமான எம் சி. பாலன் தி. மு க. விலிருந்து ராஜினமா செய்துவிட்டார்.

கட்சியில் உள்ள தலைவர்களோடு மாறுபட்ட கருத்துக் கொண்டிருப்பதே இவரது ராஜினமாவுக்கு காரணம் என அறிவிக்கிருர்.

### ராஜினமா மீதான அறிக்கை

தனது ராஜினமா பற்றி அவர் விடுத்துள்ள அறிக்கையில், தனது அடுத்த அரசியல் நடவடிக்கை பற்றி விரைவில் அறிவிப்பதாக கூறியுள்ளார். கருணநிதி முதலமைச்சரான பிறகு அதிகார “தாரணையில் நடக்க ஆரம்பித்து விட்டார், என்றும் திண்டுக்கல் தேர்தல் முடிவுக்குப் பிறகு அ. தி. மு. க. வின் பக்கமே நியாயம் இருக்கிறது என்றும் அந்த அடிப்படையில் தனது மன உணர்ச்சிகளைதான் கருணநிதியிடம் நேரடியாகக் கொடுத்துள்ள கடிதத்தின் மூலம் தெரிவித்திருப்பதாக தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

மேலும் அக்கடிதத்தில் கருணநிதி அமைச்சரவை ராஜினமாச் செய்ய மக்கள் விரும்புவதாகவும், எனவே இதுசமபந்தமாக பொதுக் குழுவில் விவாதிக்க வேண்டும என்றும் குறிப்பிட்டிருக்கிருர்.

### அமைச்சர்களின் மிரட்டல்

விரைவில் நடக்கவிருக்கும் தி. மு. க. பொதுக்குழு கூட்டத்துக்கு வரக்கூடாது என்றும், மீறி வந்தால ரசாபாசம் நடக்கும் என்றும் தன்னை அமைச்சர்கள் ராசாராமும், மண்ணை நாராயணசாமியும் மிரட்டியதாகவும் எம். சி. பாலன கூறியுள்ளார்.

# மண்ணெண்ணெய் ஜீனி கோரி உண்ணவிரதம்

வெட்டுவாக்கோட்டை, ஜூன். 10—

வெட்டுவாக்கோட்டை ஊரணிபுரம் சுற்றுவட்டார பொதுமக்களுக்குகூட்டுறவு சங்கத்தின மூலம் மண்ணெண்ணை, சீனி சரியாக தட்டுப்பாடு இல்லாமல் வினியோகம செய்யப்படவில்லை கடந்த மூன்றுவாரகாலமாக பொதுமக்கள் விளக்கு வைக்காமல் கஷ்டப்படுகின்றனர். இதைகண்டித்தும் 11—6—73 திங்கள் காலை 8 மணிக்கு வெட்டுவாகோட்டை கூட்டுறவு சங்கம் ஊரணிபுரம் முன்னல் வெட்டுவாக்கோட்டை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கிளை செயலாளர் தோழர் ஏ. முத்தையன் தலைமையில் உண்ணவிரதம் இருந்தனர். கீழ்க்கண்ட தோழர்கள் அதில் பங்கு கொண்டனர்.

வ. உ. சிதம்பரம் என். ஜெயராமன் கே. ராமையா என் ராமநாதன், எஸ் கலியபெருமாள் சி. பிரமையன், என்.தங்கவேலு ஆகியோர் உண்ணவிரதம் இருந்தனர்

மண்ணெண்ணை, சீனி கிடைக்கும் வரை இந்தப் போராட்டம் தொடரும என மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிகிளை அறிவித்துள்ளது.

# கல்கத்தாவில் பாட்டா கம்பெனி மேனேஜர்கள் வேலை நிறுத்தம்

கல்கத்தா, ஜூன். 11—

கல்கத்தாவில் உள்ள பாட்டா செருப்பு கம்பெனி மானேஜர்கள் 2 நாள் வேலை நிறுத்தததை மேற்கொண்டனர். அதன் விவரம் வருமாறு:-

### கோரிக்கை

பற்ருக்குறையான மேனேஜர்களைக் கொண்டு அதிகப்படியான வேலை வாங்கப்படுகிறது. எனவே, மேலும் அதிகமான மேனேஜர்கள் நியமிக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கையை பல நாட்கள் வலியுறுத்திய பிறகு 2 நாள் வேலை நிறுத்தத்தை மேற்கொண்டனர்.

### முழு வேலை நிறுத்தம்

இதன் காரணமாக, வெள்ளிக்கிழமை, சனிக்கிழமையும் பாட்டா கம்பெனியில் முற்றிலும் வேலை நடைபெறவில்லை என கமபெனி நிர்வாகம் அறிவித்துள்ளது.

கல்கத்தாவில் உள்ள 105 பாட்டா கம்பெனி கடைகளின் மேனேஜர்கள் வேலைக்கு வரவில்லை. 24 கடைகளின் மேனேஜர்கள் மட்டும் வேலை நிறுத்தத்தில் கலந்து கொள்ளாமல்கடைகளை திறந்து வைத்தார்கள். அக்கடைகளில் பாட்டா வாங்க வந்த வாடிக்கையாளர்களை வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள மேனேஜர்கள் திங்கட்கிழமை வந்து பேட்டாவாங்கிக்கொள்ளும்படிவேண்டிக் கொண்டதன் பேரில் வாடிக்கையாளர்களும் திரும்பி விட்டனர். எனவே, அக்கடைகளிலும் தொழில் நடைபெறவில்லை.

# பயங்கர விபத்துகள்...

## சர்வதேச விதி மீறப்படுகிறது

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆங்கில வார ஏடான “பீப்பிள்ஸ் டெமாகரசி” எழுதிய தலையங்கம் கீழ்வருமாறு உள்ளது;—

மத்திய உருக்கு மந்திரி மோகன் குமாரமங்கலமும் மற்றுமுள்ள 47 பிரயாணிகளும், படுமோசமான விமான விபத்தில் மரணமடைந்தார்கள் என்ற செய்தி பத்திரிகைகளில் வெளிவந்த அன்றே, அதே பத்திரிகைகள், பம்பாய் புறநகர் பகுதியில் ஒரு ரயில விபத்தில் 40 உயிர்கள் பலியாகிவிட்டதையும், ஏராளமானவர்கள் படுகாயப்பட்டதையும் செய்தியாக வெளியிட்டிருந்தது.

ஒரு ரயில்வண்டி, கைசாட்டிக்காக ரயில் நிலையத்தில் காத்துக்கொண்டிருக்கும்போது மற்ருெருரயில், பின்புறமாக வந்து மோதி நொறுங்கியது.

நான்குநாட்களுக்குப் பிறகு, தாண அருகில் இரண்டு ரயில்கள் இதே மாதிரியான விபத்தில் சிக்குண்டு, 47 பேர் மரணமடைந்தனர்.

### திடுக்கிடும் தகவல்கள்

விமான விபத்து பற்றிய விசாரணை நடக்கவிருக்கிறது. விபத்தின் காரணத்தை அறிய விசாரணை போடப்பட்டிருக்கிறது ஆனல்அதற்கு முன்னதாகவே பல திடுக்கிடும தகவலகள் வெளிவருகின்றன.

உள்நாட்டு விமானப் போக்குவரத்து மந்திரி சபையிலுள்ள அதிகாரிகள், திறமையின்மையும், கவனக்குறைவும் பற்றியசெய்திகள் வந்தவண்ணமிருக்கின்றன. இதே அதிகாரிகள்தான், மிக ஆபத்தான குறைபாடுகள் உள்ளது என்று தெரிந்தும் “அவ்ரோ” விமானங்களை ஓட்டிச் செல்லும்படி விமான ஓட்டிகளை கட்டாயப்படுததியவர்கள்.

இந்த போயிங் 737 விமானம விபத்துக்களான இடமானது, பாலம விமான நிலையத்தில்தான். சென்ற ஆண்டு ஜப்பானிய விமானம் ஒன்றும், இந்தியன ஏர்லைன்ஸ் விமானம் ஒன்றும் நொறுங்கி வீழ்ந்தது. இதற்குப்பிறகாவது, விமானப் போக்குவரத்து அமைச்சகம் எல்லாவிதமான பாதுகாப்பு நடவடிக்கைகளையும் எடுத்திருப்பார்கள் என்று எல்லாரும் நினைத்தார்கள்.

சர்வதேச விமான ஓட்டிகளும், இந்திய விமான ஓட்டிகளும் பல குறைபாடுகளை எடுத்துச் சொல்லியும், தானக விமானம் இறங்க உதவி செய்யும் கருவி மே மாதம் 29ம் தேதியிலிருந்து சரியாகவேலைசெய்யவில்லை.

மே மாதம் 24ம்தேதியிலிருந்து ராடர்கருவி வேலை செய்யவில்லை. மேலும், சரியான பயிற்சிபெற்றவர்கள் இல்லாததால், அந்தக் கருவி, இரவு 7-30 மணிக்கு மேல் பயன்படுத்தப்படுவதில்லை.

கட்டுப்பாடு நிலையத்தில் ஒரு விமான ஓட்டி இருந்தால் நெருக்கடியிலுள்ள ஒரு விமானம் இறங்குவதற்கு உதவியாயிருக்கும். ஆகையால் ஒரு விமான ஓட்டி கட்டுப்பாடுநிலையத்தில் இருக்கவேண்டும் என்பது சர்வதேச விதி. ஆனல் அன்று அங்கு விமான ஓட்டி யாரும் இருக்கவில்லை.

கட்டுப்பாடு நிலையத்தின் உயரத்திலிருந்து எதிரில் வரும் விமானத்தையே பார்க்க முடியும். ஆனல் பக்கவாட்டிலோ, பின்னலோ வரும் விமானங்களைப் பார்க்க முடியாதபடி அங்குள்ள பெரும் சுவர்கள் இரண்டு தடுத்துவிடுகின்றன.

அதிக சக்தி வாய்ந்த மின்சாரக் கம்பிகள விமானம் இறங்கும்பாதையில்இருக்கக்கூடாது என்பது சர்வதேசக கட்டுப்பாடு. ஆனல, பாலம விமான நிலையத்தில், தங்கள் பழம பெருமையை நிலைநாட்டிக் கொண்டு சக்திவாயந்த மின் கமபிகள் கம்பத்தில் தொங்கிக்கொண்டிருக்கின்றன.

33000 வால்ட் மின்சக்தி பாயும் மின் கம்பிகள், ஏற்படுத்தும் காந்த சக்தி விமானததிலுள்ள உயரம் காட்டும கருவியைப் பாதித்து, தவருன குறிப்பைக் காட்டியிருக்கலாம்.

இவை எல்லாம் எதைக் குறிக்கிறது? விமானப் போக்குவரத்து அமைச்சகத்திற்கு, மனித உயிர்கள், முக்கியமானதல்ல.இதுதான் பாலம்விமானநிலையத்தின் நிலை.

### அக்கறையில்லா காங்கிரஸ் ஆட்சி

பெரிய விமான போக்குவரத்துக்சொண்ட நாடுகளிடையே நடத்திய ஒரு விசாரணை அறிக்கையில், இந்தியா கடைசி இடத்தைப் பெற்றிருப்பது தெரிந்தும் இவர்கள் தங்கள் தூக்கத்திலிருந்துவிழிசதுக கொள்ளவில்லை. அது அவர்களுடைய நியதியாகிவிட்டது. இலலையென்ருல், நான்குநாட்களுக்குள் பம்பாயில், ஆண், பெண், குழந்தைகள் உட்பட, நூறுபேர் இறந்தும், ரயில்வே மந்திரி எல். என். மிஸ்ரா — விசாரணை வேண்டாம், ஒரு அறிக்கையாவது விடாமல் இருப்பாரா?

விபத்தில் உயிரிழந்தவர்களுக்கு கொடுக்கப்படும் நஷ்டஈட்டில்கூட அவர்களுடைய வர்க்கப் பார்வை பளிச்சிடுகிறது. விமான விபததில் இறந்தவர்களுக்கு, 40,000 ரூபாயாக இருந்ததை இப்போது ஒரு லடசமாக அதிகரிததிருக்கிருர்கள். இதற்காக யாரும் வருத்தப்படவில்லை.

ரயில் விபத்தில் இறந்தவர்களுக்கு ரூ. 400 கொடுக்கிருர்கள், அதோடு விஷயம் முடிந்தது. ரயில் வியத்தில் இறந்தவர்களைவிட்டால், உண்ண உணவின்றி, அந்தக் குடும்பங்கள் நாதியற்றுவிடும். அவ்வளவுதானே? அதுபற்றி யாருக்குக் கவலை? நிச்சயமாக காங்கிரஸ் ஆட்சியாளர்கள் கவலைப்படப்போவதில்லை.

தேசவாழ்வில் எந்தத் துறையானலும் சரி — உணவு அளிப்பதானலும், வேலை அளிப்பதானலும், ஏன் போக்குவரத்து சுகாதாரம் எதுவானலும்சரி, காங்கிரஸ் ஆட்சியாளர்கள், மக்களுக்குத் துயரத்தையும் துன்பத்தையும்தான் அளிக்கிருர்கள்.

# கோரிக்கைகளைப்பெற கூடுகிருர்கள் தஞ்சை மாவட்டத்தில்

## தாலுகா விவசாயிகள் சங்க - விவசாயத் தொழிலாளர் சங்க மாநாடுகள்

தஞ்சை மாவட்டததில், இலட்சக் கணக்கான விவசாயத்தொழிலாளர்களும், விவசாயிகளும் ஸ்தாபன ரீதியாகத திரட்டப்பட்டுள்ள விவசாயத் தொழிலாளர் சங்க—விவசாயிகள் சங்க மாநாடுகள் தாலூகாவாரியாக நடைபெறுகின்றன.

இந்த மாநாடுகளில், விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் ஆயிரமாயிரமாய்க் கலந்து கொண்டு, தங்களது கோரிக்கைகள் குறித்தும், கோரிக்கைகளுக்காக இயக்கங்கள் நடத்துவது குறித்தும் விவாதித்து முடிவுகள் எடுக்கிருர்கள்.

மாநாடுகள் நடக்கும் தேதி—இடம் பற்றிய விவரம் வருமாறு:—

| தாலுகா | வி. ச. மாநாடு | இடம் | வி. தொ. ச. மாநாடு | இடம் |
|---|---|---|---|---|
| நாகை | ஜூலை— 5 | திருக்குவளை | ஜூலை— 7 | திருக்குவளை |
| நன்னிலம் | 6 | பேரளம் | 8 | குடவாசல் |
| மாயவரம் | 7 | குத்தாலம் | 9 | திருக்கடவூர் |
| திருத்துறைபூண்டி | 8 | மணலி | 6 | தலைஞாயிறு |
| மன்னர்குடி | 9 | கோட்டூர் | 5 | நீடாமங்கலம் |
| தஞ்சாவூர் | 10 | திருவையாறு | — | — |
| பாபநாசம் | 11 | வலங்கைமான் | — | — |
| கும்பகோணம் | 12 | திரப்படி | — | — |

# கண்ணோட்டம்

## மூட நம்பிக்கைக்கு 4 பேர் பலி

சேடி உன்னைச் சரணடைந்தேன் தேச முத்து மாரீ

சேடதனை நீக்கீடுவாய் கேட்டவரம் தருவாய்!

நம்பினோர் கெடுவதில்லை
நான்கு மறைத் தீர்ப்பு!

அம்பிகையைச் சரணடைந்தால்

அதிகவரம் பெறலாம்!......

இப்படியெல்லாம் நடக்கும் என்று பக்தகோடிகள், மெய்யாகவே நம்புகிறார்கள்.

அது போலவே.........

முருகனுக்கு நேர்ந்து மொட்டை அடிப்போர்க்கு கட்டை கடைத்தேறுமே! அவர் காரியம் கைகூடுமே!...

குமரனைப் போற்றிக் கொண்டாடுவோருக்கு, குறைகளெல்லாம் தீருமே! அவர் குடும்பம் சுகம் பெறுமே!

இப்படியாக, தீராத வினையெல்லாம் தீர்த்து வைக்கும் தெய்வம் என்று நம்பி, எத்தனையோ கோடி மக்கள் மொட்டை போடுவதும் முழுக்கும்போடுவதும், அக்காலத்தைக் கழித்துக் கொண்டிருப்பது மாத்திரமல்ல பாடுபட்டுத் தேடிய பணத்தையும் அழித்துக் கொண்டிருக்கிறார்கள்.

உடல் நலம் சரி இல்லை என்றால் அதற்கு வேண்டிய அதிக விலையுள்ள மருந்து மாத்திரைகள் வாங்கவேண்டும், உயர்ந்த ஊசிபோடவேண்டும். நல்ல டாக்டரிடம் போய் அதிக பீஸ் கொடுத்து சிகிச்சை பெற வேண்டும்.

இதற்கெல்லாம் நிறைய செலவு ஆகும்.

நாட்டு மக்களை மேலும் மேலும் வறுமைக் குழியிலேயே தள்ளிக் கொண்டிருக்கிற சுரண்டல் சமுதாய அமைப்பும், இந்த அமைப்பின் அமைதியையும் ஒற்றுமையையும் பாதுகாத்துக்கொண்டிருக்கின்ற சுரண்டல் வர்க்க அரசும் நீடிக்கின்ற வகையில், பாடுபடும் பாட்டாளி மக்களின் உடல் நலம், வேலைப் பளுவினாலும், விலைவாசி உயர்வினாலும், வறுமையினாலும் உடையத்தான் செய்யும்.

உடல் நலத்தைப் பாதுகாத்துக் கொள்ள, போதிய சத்துள்ள உணவோ, உயர்ந்த மருத்துவ வசதிகளோ, ஏழை மக்களுக்குக் கிடைக்கப் போவதுமில்லை. அதனால் உடல் நலம் மேலும் மேலும் செட்டுப் போவதைத் தடுக்கவும் முடியாது

இதலிருந்து மக்களைப் பாதுகாக்க— சுரண்டல் சமுதாயத்தை ஒழித்துக் கட்டும் அடிப்படைப் புரட்சிப் பணியில் நாட்டம் செலுத்தவேண்டும். அதுடன் கூடவே, ஊழைப்பாளி மக்களின் இன்றைய வாழ்க்கை தரத்தையும் உடல் நலத்தையும் பாதுகாப்பதற்காகவும் முன்வரவேண்டும். ஊதிய முடக்கம், விலைவாசி ஏற்றம் மூலமாக சன்னம் சன்னமாக நமது வாழ்க்கையை நறுக்கிக் கொண்டேயிருக்கும் சுரண்டல் வர்க்க முயற்சிகளை முறியடிக்கவேண்டும். ஊதிய உயர்வுக்காகவும், குறைப்புக்காகவும், வேலை கிடைப்பதற்காகவும், இதர கோரிக்கைகளுக்காகவும் பாட்டாளி மக்கள் நடத்தும் போராட்டங்களை ஆதரித்து வெற்றிபெறச் செய்ய வேண்டும்.

இப்படித்தான் செய்தார்கள் ருஷ்ய நாட்டு மக்கள் இப்படித்தான் செய்தார்கள் சீனநாட்டு மக்களும், இதர சோஷலிஸ்ட நாடுகளின் மக்களும்!

அதனால்தான் அங்கெல்லாம் முதலாளித்துவ சமுதாயம் ஒழிந்து சோஷலிஸ் சமுதாயம் மலர்ந்துள்ளது நல்லசம்பளம், தேவையான அளவுக்கு போஷாக்குள்ள உணவு, சகல உயர்ந்த வைத்திய வசதிகளும், ஓய்வு விடுதிகளும் இலவசமாக!......எல்லாம் கிடைக்கிறது அங்கே.

இந்த விபரங்களை நமது மக்களிடம் சொல்லாமல்...சொல்லாமல போனாலும் போகட்டும் மறைத்தும் விட்டு...மறைத்தாலும் தொலைந்து போகிறது...அந்த நாடுகளைப் பற்றி இல்லாததும் பொல்லாததுமான பூதக்கதைகளையும் கட்டிவிட்டு மிரளவும் அததுடனாவது நின்று தொலையாமல், தெய்வ சினிமாப் படங்களையும் எடுத்து...அதிலே அழகுத் தமிழில் அண்டப் புளுகுகளை அளந்துவிடும கிருபானந்தவாரிகளைப் போன்றவர்களைக் கொண்டு மூட நம்பிக்கைகளைப் பரப்பி விடுவதுமாக இருக்கிறார்கள்.

அந்தப்புளுகர்களும் அந்தப் படங்களும் உடல் நலமில்லாதவர்களுக்கு ஆண்டவன் உடல் நலம் அளிப்பதாகவும்—பேச முடியாத ஊமைகளைப் பேச வைப்பதாகவும் காட்டி—மக்களை நம்ப வைத்து விடுகிறார்கள்.

இந்த நம்பிக்கைச்குப் பலியானவர்கள் தெய்வ வழிபாட்டில் இறங்கி காலத்தை மட்டு மின்றி பணத்தையும் விரைய மாக்குகிறார்கள்.

காலமும் பணமும் மட்டுமா விரையமாகிறது?

பலர் உயிர்ப்பலியும் கொடுக்க நேரிடுகிறது.

உதாரணம் வேண்டுமா?

இராம்நாதபுரம் நகருக்கு ஒன்னரை மைல்தொலைவில் உள்ளது காவனூர் கிராமம.........அங்கே ஒரு ஓமியோபதி டாக்டர்...மகாதேவன் என்பது அவரது பெயர்...அவருக்கு ஞானம் என்ற ஒரு மனைவி......

திருமணமாகி 10 வருடமாச்சாம்... பிள்ளை இல்லையாம்...பிள்ளைவரம் கேட்டு காளிபூசை செய்தார்களாம்...ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு காளீசுவரனும் பராசக்தியும் பிறந்தார்களாம...

அது காளியின் கிருபையால் என்று கருதி "எங்கள் கனவில் காளிவந்து கோயில் கட்டச்சொன்னாள்', என்று ரூ2000 செலவிட்டு ஒரு கோயிலும் கட்டினார்களாம்...

அத்துடனாவது சும்மா இருந்து தொலையக் கூடாதா?......

பக்தி ஆச்சே! அதுவும் காளிபக்தி ஆச்சே! சும்மாவா விடும்? தலையைவிரித்துப் போட்டு ஆடுச்சாம்!...

அந்த ஊரில் இருந்த ஒரு ஊமைப் பையனையும் ஒருபைத்தியத்தையும குணமாக்கிக் காட்டுகிறேன். இல்லையேல் குடும்பத்தோடு தற்கொலை செய்து சாகிறேன்...என்று மகாதேவன் சபதம் போட்டாராம்!...

அப்புறம் என்ன!...

பூஜை நடந்தது...நடந்து கொண்டே இருந்தது

...நடந்ததுதான் மிச்சம்!...

ஊமையும் பேசவில்லை...பைத்தியமும் தெளியவில்லை. சபதம் தோற்றது.

அப்புறம்......

மனம் உடைந்தார் மகாதேவன். புது உடை உடுத்தினார்...மனைவி மக்களையும் உடுத்தச்சொன்னார்.

காளிகோவிலுக்குப் போனார்- பூசை செய்தார் மூட்டைபூச்சி மருந்தை காபியில கலந்து மகள் பராசக்திக்குக் கொடுத்தார்; மகன் காளீசுவரனுக்குக் கொடுத்தார்; மனைவி ஞானத்துக்குக் கொடுத்தார் தானும் குடித்தார்.

அப்புறம் என்ன?

ஒரே வீட்டிலிருந்து 4 பாடைகள் புறப்பட்டன.

ஊரே திரண்டு அழுதார்களாம்! ஏன் அழவேண்டும்? மகாதேவனைப் பிடித்த மூடபக்தி, அங்கு கூடிய ஒவ்வொருவரையும் பிடித்து நான் ஆட்டுதே!

அந்த ஊருக்கு வாரியாரைத்தான் அழைத்து திருப்புகழ் பாட வேண்டும்! தெய்வம் சினிமா போட வேண்டும்!......

ஐ. மா. பா.

---

பாலாறு - புரந்தலாறு அணை

# தொழிலாளர்களின் குறைகளைக் களைவீர்

## தமிழக அரசுக்கு சங்கச் செயலாளர் கோரிக்கை

சோலையார்நகர், ஜூன். 12— பொதுப் பணித்துறை தொழிலாளர் சங்கத்தின் செயலாளர் தோழர் பி. டி. அந்தோணி கீழ்வரும் அறிக்கையினை விடுத்துள்ளார்.—

பாலாறு- புரந்தலாறு அணையில் தொழிலாளர்களின் குழந்தைகள கல்வி கற்க அமைக்கப்பட்டிருக்கும் தொடக்கப்பள்ளியில் 350-க்கு மேற்பட்ட குழந்தைகள கல்வி கற்று வருவதாக தெரிய வருகிறது.

ஆனால் 5 ஆசிரியர்கள் மட்டும் இருப்பதால், ஒரு வகுப்பிற்கு 60 குழந்தைகளுக்குமேல் வைத்துகல்வி கற்று கொடுப்பதால, கல்வி தரம் குறைந்துவரும்சூழ்நிலை உருவாகி வருவதால் மேலும் 3 ஆசிரியர்கள் நியமித்திட விரைவான நடவடிக்கை எடுத்திட சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் வேண்டப்படுகிறது.

### டாக்டரின் அலட்சியம்

பாலாறு அணையிலிருக்கும் மருத்துவ மனைக்கு 10 கி. மீட்டர் தூரத்திலிருக்கும் பழனி மருத்துவ மனையிலிருந்து ஒருநாளைக்கு ஒரு டாக்டர் என்று அழைத்து வர அரசாங்க ஜீப் செல்லுறும் சிலநாட்களில் டாக்டர்கள் வராததினால் நோய்வாய்ப்பட்டு அவதியடையும் தொழிலாளர்கள் மிகவும் துன்பமடையும் நிலை வருவதால் பாலாறு அணையில் அமைக்கப்பட்டிருச்கும் அரசாங்க மருத்துவ மனைக்கு தனி டாக்டர் நியமித்திட உடனே நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும்-

டாக்டர் வராததினால் மருத்துவத்திற்காக பழனிக்குச் செல்லும் அரசாங்க வாகனச் செல்வு குறையும் சூழ்நிலை ஏறபடும என்பதை தமிழக அரசு உணர்ந்து விரிவான நடவடிக்கை எடுத்திட வேண்டும்.

அரசாங்க வாகனங்கள் பழுதடையும் வேலையில் அதை சரி செய்திட அதற்குள்ள பாகங்களை உடனே வர வழைத்து நல்ல முறையில்இயக்கிட தனிக்கவனம் செலுத்தினால் அணைக்கட்டில் விரைவான முன்னேற்றம் ஏற்பட சாத்தியமாகலாம்.

கன இயந்திரங்கள் பழுதடையும்போது உடனே தக்க நடவடிக்கை எடுத்து சரி செய்ய வழி வகுக்கப் படவேண்டும்.

காண்ட்ராக்ட் முறையினால் அணைகள் கட்டுவதை கைவிட்டு, பொதுப் பணித்துறை அரசாங்க வாகனங்கள நல்ல முறையில் இயங்கிட வழிவகுத்திட வேண்டும்.

### அரசு பணம் வீண்

காரணமில்லாமல் அரசு ஊழியர்களை வேறு இடங்களுக்கு மாற்றுவதால், பயணப்படிகொடுக்கப்பட்டு அரசு பணம் வீணாக்கப்படுகிறது வேலை இருந்தும சி. ஐ. டி யூ அங்கத்தினர் என்பதால்மாற்றப்படுவதும் பழிவாங்கப்படுவதும் நடப்பதாகக் கருதுகிறோம். இந்நிலை நீங்கி, பாகுபாடு ஒழிந்திட வேண்டப்படுகிறது. நல்லமுறையில் பணி புரிந்துவரும் தொழிலாளர்கள் சி.ஐ.டி.யூவில் இருப்பதால், தொடர்ந்து மாற்றப்பட்டு, அரசு பணம் பயணப்படியாக வீணாக்கப்படும் சூழ்நிலை உருவானால், உழைக்கும் வர்க்கம் போராடும் நிலை வரும்.

### மகப்பேறு இல்லம் அமைத்திடுக

மாநில மட்டநிதி ஊதியம் பெறும் ஊழியர்களுக்கு இரண்டாவது சம்பளக்குழு திருப்தி தருவதாக இல்லை இதனால் பொதுப்பணித்துறை ஊழியர்கள் வேதனையடையும் நிலையிலிருக்கிறார்கள். தனித்தனியாக அரசு ஆணைகள் பிறப்பிக்கப்படாமல், மினிஸ்டிரியல் சர்வீசிலிருப்பவர்களுக்கு இருப்பது போல் வெயிட்டேஜுடன் இரண்டாவது சம்பளக் குழு நிர்ணயித்திட வேண்டும்.

பாலாறு அணையில் தாய் சேய் இல்லம் இல்லாததினால் அணைக்கட்டும் ஏழைத் தொழிலாளர்கள் அல்லல் படும் நிலை தொடர்ந்து நீடிப்பதால், அணை கட்டப்படும இடத்தில் தாய் சேய் இல்லங்கள் அமைத்திட, நடவடிக்கை உடனே எடுக்க வேண்டும்.

இவ்வாறு தமது அறிக்கையில் குறிப்பிட்டார்.

---

## நடக்க இருப்பவை

மதுரை

**குமார் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சிகள்**

ஜூன் 13 ஊர்சேரி
14 மதுரை மோதி லால் ரோடு
15 மதுரை சோம சுந்தரம்காலனி
ஜூன் 16 முதல் 26 வரை பெரியகுளம் தாலுகா

∴ ∴ ∴

மதுரை நகர்

**சினிமாத் தொழிலாளர் பேரவைக் கூட்டம்**

14—6—73-ந் தேதி காலை 9 மணிக்கு

மதுரை ஜெனரல் ஓர்க்கர்ஸ் யூனியனில் நடைபெறும்.

தோழர்கள் :

**கே. வாசுதேவன்**
**ஆர். சாமிவேல்**
**எஸ். கணபதி**
**ஓ. சண்முகம்**

ஆகியோர் பேசுவர்.

---

கடப்பாறையை விழுங்கியவனுக்கு சுக்கு கஷாயமா?

# வங்கி வட்டியை உயத்திவிட்டால் போதுமா?

சமீபத்தில் மத்திய அரசு ரிசர்வ்பேங்கு அளிக்கும் கடன்களுக்கான வட்டியை 6 சதவீதத்திலிருந்து 7 சதவீதத்திற்கு கூட்டியது.

இன்றைய சூழ்நிலையில் விலைவாசியைக் கட்டுப்படுத்தவே இந்நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதாக காரணம் கூறியது.

ரிசர்வ் பேங்க் வட்டியை உயர்த்தியதால், விலைவாசி உயர்வு எவ்வாறு கட்டுப்படும் என்பதற்கு அமைச்சர்களால்கூட சரியான விளக்கம் அளிகக முடியவில்லை.

வட்டியை ஒரு சதவீதம் கூட்டுவதும், வர்த்தக பேங்குகளின் இருப்பு நிதியின் விகிதத்தை 3 சதவீதத்திலிருந்து 5 சதவீதத்திற்கு உயர்த்துவதும், வர்த்தக பேங்குகள் கொடுக்கும் கடனுக்கும் 10 சதவீத வட்டிக்கு குறையாமல் வாங்குமபடி உத்திரவிடுவதும் விலைவாசியைக் கட்டுப்படுத்துவதற்கோ அல்லது பண வீக்கத்தை நிறுத்துவதற்கோ போதுமான வழிகள் அல்ல.

### திருட்டுப்போன பிறகு

ஏற்கனவே இந்த ஆண்டின் ஏப்ரல்மாத இறுதியோடு வியாபாரிகள பேங்கில் கடன் வாங்கும் வேலை முடிந்துவிட்டது ஏப்ரல் இறுதிக்குள் பழைய கடன்முறையைப் பயன்படுத்தி பதுககல்காரர்கள் எல்லாம் தேவையான அளவு வாங்கிக் கொண்டார்கள். ராக்கெட் வேகத்தில் ஏறிக் கொண்டிருக்கும் விலைவாசி உயர்வு அதற்குச் சாட்சியாகும்.

இத்தனைக்கும்பிறகு ரிசர்வ் பேங்கின் வட்டியை கூட்டும் நடவடிக்கை திருடன் திருடவேண்டியதையெல்லாம் திருடிவிட்டு போனபின்பு, வீட்டுக் கதவை பூட்டுவதுபோல்தான் உள்ளது.

### பண முதலைகளிடம் உள்ள பணம்

சரி. கடன் வாங்குவோரிடம் பத்து சதவீதம் வட்டி வசூலிக்க வர்த்தக பேங்குகள் உயர்த்தப்பட்டாலும், விலைவாசி உயர்வைத்தடுக்க முடியாது. கடுமையான முறையான நடவடிக்கைகள் எடுக்கப்படாமல், பதுக்கல்காரர்களின் சதிவேலைகளை தடுத்து நிறுத்திவிட முடியுமா?

பேங்கு வட்டி உயர்வின்மூலம் மட்டும் அவர்கள் லாபம் சம்பாதிக்கும் வழிகளை தடுத்து நிறுத்திவிட முடியாது. 10 சதவித வட்டியில் வாங்கும் கடனைவிட பலமடங்கு அந்தப் பண முதலைகள் சம்பாதித்து வைத்திருக்கிறார்கள். எனவே வட்டியை 10 சதமாகவோ, அதற்கு மேலேயும் கூட்டியதற்காக அவர்களது லாபம்தேடும் வேலையைத் தடுத்திட முடியுமா? நிச்சயம் முடியாது.

### அரசுக்கு துணிச்சல் உண்டா?

பண வீக்கத்தையும், விலைவாசி உயர்வையும் குறைப்பதற்கான அவசியமான நடவடிக்கைகளை அரசாங்கம் மேற்கொண்டுள்ளதா? பல ஆயிரக் கணக்கான கோடிக் கள்ளப் பணம் நாட்டில் இருட்டு வேலைகளில் ஈடுபட்டுள்ளதே! அதை தடுகக ரிசர்வ் பேங்க் கூறிய யோசனை என்ன? அரசாங்கம் எடுத்த நடவடிக்கை என்ன?

ஆயிரக்கணக்கான கோடி ரூபாய்கள் வியாபாரசூழ்ச்சி வேலைகளிலும், விலைவாசியைக் கூட்டுவதிலும் திரை மறைவில் ஒரு போட்டிப் பொருளாதாரத்தையே நடத்திக் கொண்டிருக்கின்றனவே. அதை அழித்தொழிப்பதற்கு அரசுக்கு துணிச்சல் உண்டா?

அரசின் நடவடிக்கைகளையும் மீறி இந்தக் கள்ளப் பணங்கள் பணவீக்க நிலையை அதிகரித்துக்கொண்டிருக்கின்றன.

### ரிசர்வ் பேங்கின் தாக்கீது

ஆனால், ரிசர்வ் பேங்கிலிருந்து கமர்ஷியல் பேங்குகளுக்கு அனுப்பப்பட்ட கடிதம் பகிரங்கமாக கூறுவது என்ன? தொடர்ச்சியான, கடுமையான பட்ஜெட் பற்றுக்குறைகளே இந்த உயர்வுக்கு (பணவீக்க அதிகரிப்புக்கு) காரணமாக உள்ளன" என்கிறது.

மேலும், அது "பட்ஜெட் நடவடிக்கைகள், குறிப்பாக மிதமிஞ்சிய பொதுச் செலவினங்களின் மீது கடும் கட்டுப்பாடுகள் கொண்டு வருவதே பிரதான பரிகாரமாகும்" என்று கூறுகிறது.

எனவே, பேங்க் வட்டி உயர்வு சம்பந்தமாக நாம் விமர்சிப்பது என்னவெனில் தறபோதைய பண வீக்க நிலையைத் தவிர்ப்பதற்கு இந்த ஒரு சதவீத வட்டி உயர்வும் அதோடுகூடிய சில சில்லறை நடவடிக்கைகளும் மிக மிக பலஹீனமான அம்சங்கள்.

### திரைபோடும் வேலையே

வரக்கூடிய பருவமழைக் காலங்கள் நல்ல முறையில் அமைந்து, விவசாய உற்பத்தி அதிகரிக்குமானால் ஒரு குறைந்த காலத்துக்கு விலைவாசி உயர்வில் சிறிது தடுப்பு இருக்கும். அவ்வளவுதான் அது என்ன நிரந்தர விலைவாசி உயர்வைத் தடுத்துவிட முடியுமா?

எனவே கள்ளப் பணத்தின் மீதான கடும் தாக்குதல், அத்தியாவசியப் பொருட்களின் மீது கட்டுப்பாடு, உற்பத்திக்குப் பயன்படாத அரசின் செலவுகளை ஒழித்தல் போன்ற அர்த்தமுள்ள நடவடிக்கைகளை எடுக்காமல் விலைவாசி குறைப்பு நடக்கக்கூடிய காரியமா? நிச்சயமாக இல்லை.

எனவே, கமர்ஷியல் பேங்குகளில் வட்டியை கூட்டுதல் போன்ற நடவடிக்கைகள் விலையையும் பண வீக்கத்தையும் குறைப்பதற்கான நடவடிக்கைகள் அல்ல. விலை உயர்வுக்கெல்லாம் காரணமான கள்ளப்பண முதலைகளையும் கள்ள மார்க்கெட்காரர்களையும், பதுக்கல் திருட்டுப் பேர்வழிகளையும் திரையிட்டு மறைக்கும் வேலை இது. உணவுப் பிரச்சினை தீரவும், ஏனைய உரிமைகளுக்காகவும் போராடும் மக்களின் நியாய உணர்வுக்கு இந்த உண்மை தெரியாமலிருக்கும் பொருட்டு திரைபோடும் வேலைதான் இது. உண்மையில் விலையைக் குறைக்க எடுத்த உருப்படியான நடவடிக்கை அல்ல.

கடப்பாறையை விழுங்கியவனுக்கு சுக்கு கஷாயம் கொடுத்தால் நோய் குணமாகுமா? ஆப்ரேஷன் தேவை.

—'பீப்பிள்ஸ் டெமாக்கிரசி'யில் வெளியான குறிப்பு.

---

தலைவலி போய் திருகுவலி வந்தது

# அரசு ஊழியருக்கு எதிராக- தமிழக அரசின் நடவடிக்கை குறித்து என். ஜி. ஓ. தலைவர்

மதுரை, ஜூன் 12— அந்தரங்க கோப்பு முறையை (சீக்ரெட்பைல்) நீக்கி விட்டதாக ஒருபுறம் தம்பட்ட மடிக்கும் தமிழக அரசு, மறுபுறம் அரசு ஊழியர்களுக்கு பல்வேறு இன்னல்களைத் தரும் புதியபுதிய ஆணைகளைப் பிறப்பித்து வருவதாக மதுரை மாவட்ட அரசு ஊழியர் சங்கத் தலைவர் எப் எம் குத்புதீன் கண்டனம் தெரிவித்துள்ளார்.

இது குறித்து அவர் வெளியிட்டுள்ள ஓர் குறிப்பில் கூறியிருப்பதாவது:—

அரசு ஊழியர்களில் அந்தரங்கக் கோப்பு முறையை நீக்கி விட்டதாகவும், அவ்வாறு நீக்கியது அரசு ஊழியர்களுக்குச் செய்த மாபெரும் நன்மை என்றும், ஆங்கிலேயர் கொணர்ந்த அடிமை முறையைத் தாங்கள் அகற்றிவிட்டதாகவும் மேடைகளில் முழங்கிவரும் தமிழ்நாடு அரசின் அண்மைக்காலஆணைகள், அரசு ஊழியர்கள்பால் எவ்வாறு வெறுப்பையும் கடுமையையும் கொண்டுள்ளன என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன.

### தலைவலி போய் திருகு வலி

இருபத்தைந்து ஆண்டு பணி நிறைவு பெற்றவர்களும் அல்லதுஐம்பதாண்டு நிறைவு அடைந்த அரசு ஊழியர்களையும் பணியினின்றும் கட்டாய ஓய்வு கொள்ளச்செய்யும் சந்தானம் குழுவில் பரிந்துரைக்கேற்ப, தமிழ்நாடு அரசு பிறப்பித்துள்ள ஆணையும்,அண்மையில் அரசு ஊழியர்கள் ஊதியநிறுத்தம் ஆகிய தண்டனைகளுக்கு அவர்களின் எதிர்காலப் பதவி உயர்வினைத் தடுக்கும் முகத்தான் கண்டனம் கொடுக்கப்பட்டவர்களுக்கு ஓராண்டு காலம் பதவி உயர்வு வாய்ப்பினைத் தடுப்பதும், ஊதிய நிறுத்தம் பெற்றவர்களுக்கு அவர்தம் பதவி உயர்வு வாய்ப்பினை மூன்று ஆண்டுகளுக்கு நிறுத்தியும் பிறப்பிக்கப்பட்டுள்ள ஆணையும் அரசு ஊழியர்கள்பால் அரசின் எண்ணம் எத்தகையது என்பதைத் தெளிவாக்குகின்றன.

"தலைவலி போய் திருகுவலி வந்தது" என்பது போல, அந்தரங்கக் கோப்பு முறையை அகற்றிவிட்டோம் எனப்பறை சாற்றும் அரசினர் இத்தகைய கடுமையான ஆணைகளை அவ்வப்போது பிறப்பிக்கும்அரசு -ஊழியர்களை மேலும்மேலும் அதிகாரிகளின் அடிமைகள்' என்ற நிலைக்கு ஆளாக்கி வருதல் கொடுமையிலும் கொடுமையாகும்.

### தவளைகளின் கதை போல ..

தவளைகள் எல்லாம் தங்களுக்குத் தலைவனாக ஒரு பொருளை வேண்டிய போது, தவளைகளில் கடவுள் தவளைகளுக்கு மரக்கட்டை ஒன்று கொடுத்தானும். மரக்கட்டையின் தலைமையை வெறுத்தத் தவளைக் கூட்டம், கட்டைக்குப் பதில் வேறு ஒரு தலைமையை விரும்ப பாம்பினைத் தலைவனாக ஆக்கியதாம் தவளைகளின் கடவுள். பாம்பின் தலைமையால் தவளைகள் பட்ட துயரும், இழப்பும் கண்ட தவளைகள், தங்களுக்கு மீண்டும் கட்டையே தலைவனாக இருந்தால் போதும் என்று எண்ணி கடவுளிடம் முறையிட்டனவாம். அது போல் மீண்டும் அந்தரங்கக் கட்டு முறை கொண்டு வந்தால, போதுமென அரசு ஊழியர்கள் கேட்பார்களென அரசு கருதுகிறதோ என்னவோ?

இதைப் போன்று தான் அந்தரங்கக் கோப்பை அகற்றி விட்டோம் என்று ஒரு புறம் கூறிக் கொண்டு, மறுபுறம புதிய புதிய கொடுமை தரும் கடுமையான ஆணைகளை வெளியிடல் ஊழியர்களின் வாழ்வில் வளத்தைக் காண விடாது தடுக்கும் முறையாகும். அந்தரங்கக் கோப்பு முறையையும் எதிர்போம். "அந்தரங்க" எண்ணத்தைப் பிரதிபலித்து அவ்வப்போது ஆணைகள் என்ற பெயரில் வெளிவரும் (இத்தகைய) நச்சு முறைகளையும் கறுப்பு எண்ணங்களையும் எதிர்ப்போம்.

### அரசு ஊழியர்களே அணி திரள்வீர்

இந்திய அரசின் நிர்ணய சட்ட விதி 309-ல் அரசு ஊழியர்களின்பனி விதிகளை சட்டமாகக் கொணர்ந்து நடைமுறைப்படுத்துவதை விட்டு விட்டு அவ்வப்போது இத்தகைய விதிகளை ஏற்படுத்தும் முறையையும் தமிழ்நாடு அரசு ஊழியர்கள் அனைவரும் கண்டிக்கின்றனர். இத்தகைய விதிகளை ஒரு முகமாக எதிர்த்துப் போராட அரசுஊழியர்களின் எல்லா சங்கங்களும் முன் வருமாறு, மதுரை மாவட்ட என். ஜி. ஓ சார்பில் விரும்பி வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.

---

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில், [13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1.] அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.